*Kumaran*

*Āram 4, muttu 19*

*December 23, 1926*

Record no. 313

Registered No. M. 1823.

சிவமயம்.

# குமரன்

"என்கடன் பணிசெய்து கிடப்பதே."

(வாரப் பதிப்பு.)

வியாழன்தோறும் வெளியிடப்பெறுவது.

"சுதரே உயிர்."　　"கருணையே தெய்வம்."

ஆரம் ௪.　காரைக்குடி. அட்சய-ஹூ மார்கழி-மீ ௮-உ (23—12—26)　முத்து கூ

10

## புதிய யுகம்.

(பி. ஸ்ரீ.)

தற்காலத்தில் மூன்று விதமான புரட்சிகள் நடைபெற்றுள்ளன. முதலாவது, விஞ்ஞான சாஸ்திர சம்பந்தமான புரட்சி. இரண்டாவது, அரசியல்-புரட்சி. மூன்றாவது புரட்சி, கைத்தொழில் சம்பந்தமானது.

*　　*　　*

முதலாவது, விஞ்ஞான சாஸ்திரத்தை நோக்குவோம்.

புத்தம்புதிய கலைகள்—பஞ்ச
பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்;
மெத்த வளருது மேற்கே.

மேற்கே வளரும் புதுக்கலைகளின் பயனாக, நீராவியும்-மின்சார சக்தியும் கண்டுபிடிக்கப்பெற்றுள்ளன. இதனால் அதிவேகமாக நாம் பிரயாணம் செய்கிறோம். நீராவி வண்டிகளாலும் மோட்டார் வண்டிகளாலும் தரையிலும், நீராவிக் கப்பல்களால் கடலிலும், ஆகாயக் கப்பல்களால் வான வீதியிலும் நாகரிக மக்கள் வேகமாகத் திரிந்து பறந்து வருகின்றார். அதிதூரத்திலிருந்து வெகு வேகமாக, கம்பியில்லாத் தந்தி, செய்திகளை நம் செவியிலே கொண்டு வீசுகின்றது.

*　　*　　*

இராவணேச்வரன் இலங்கையை இந்தியாவிலிருந்து பிரிக்கும் தெற்குமாகடலை 'வேலைக்குட்டம்' என்று அலட்சியமாகக் குறித்தனனாம். அவ்வண்ணமே அமெரிக்காவை ஐரோப்பாவிலிருந்து பிரிக்கும் அத்லாந்திக் மகாசமுத்திர (மேற்குமாகடல்) த்தையும் வெள்ளைமக்கள் ஒரு 'குட்டை'யாகவே (The pond) கருதுகின்றார்.

*　　*　　*

விஞ்ஞான சாஸ்திரிகள் கண்டுபிடித்துள்ள நீராவியின் வல்லமையாலும் மின்சார சக்தியாலும் மகாசமுத்திரங்கள் குட்டைகளாகின்றன. தூரம் சமீபமாகின்றது. எனினும் அறிவாற்றல்களைப் பெருக்கி வரும் மக்கள் அறமெனும் பெருநெறி பற்றி யொழுகாததால், அன்பில் — அருளில்—ஒழுக்கத்தில் வளர்கின்றாரில்லை. விஞ்ஞான சாஸ்திரம் நாகரிக மனிதன் கையில் அபாரமான ஸ்தூல சக்தியைக் கொடுக்கின்றது. சக்தி நல்வழிப்படுவது முண்டு; கெட்டவழியில் செல்வது முண்டு. "அரக்கரது சக்தி வேண்டும். ஆனால் அரக்கரைப்போல உபயோகித்தல் ஆகாது"—என்று கூறும் ஷேக்ஸ்பியர் மகாகவியின் அருள்வாக்கினை, நவநாகரிகம் சிந்தை செய்வதில்லை.

*　　*　　*

விஞ்ஞான சாஸ்திர ஆராய்ச்சியோடு, ஆன்மஞானமும் ஒழுக்க நெறியும் வளர்ந்தோங்கல் வேண்டும். விஞ்ஞான சாஸ்திரம் ஓர் இயந்திர நாகரிகத்தை உண்டு பண்ணிவிட்டது. இந்நாகரிகம், இவ்வுலகினை நாதன் இல்லாததோர் இயந்திரமாக மதிக்கின்றது. இறை-உயிர் பொங்கித் ததும்பும் உலகிடை, ஆன்மாவில்லை, பரமான்மாவில்லை யெனக் கூறுகின்றது. இப்போதுதான், ஸர் ஆலிவர் லாட்ஜ் போன்ற சில விஞ்ஞான சாஸ்திரிகள் வாயிலாக இந்நாகரிகம் ஒருவாறு ஐம்புலனுக்கும் எட்டாத நுட்பங்களைக் கண்டு வருகின்றது

*　　*　　*

இனி, அரசியல் — துறைகளில் மேலைநாட்டார் செய்துள்ள புரட்சிகளைப்பற்றி ஆலோசிப்போம். எத்தனையோ புரட்சிகள் ஏற்பட்டபோதிலும் மேலைநாடுகளில் இன்னும் 'இராமராஜ்யம்' ஏற்படவில்லை. மேற்கே, விஞ்ஞான சாஸ்திரங்களோடு விடுதலைக்காதலும் தழைத்து வளர்கின்றது. எனினும் மேலைநாட்டார் கீழ்நாடுகளை என்றும் 'கீழ்நாடு'களாகவே மதித்து அடிமைப்படுத்தி வருகின்றார். ஏகாதிபத்திய இச்சையே மேலைநாடுகளின் பெரும் பைத்தியமாக இருக்கின்றது. விஞ்ஞான சாஸ்திரத்தைத் துணைபாகக் கொண்டு, வேகமாக நாகரிகப் பந்தய ஓட்டம் ஓடும் மேலைநாடு, போகத்தையும் பொருளையும் ஒருங்கே பெருக்கி வருகின்றது.

*　　*　　*

ஒருபுறம் பெருஞ் செல்வம்; மறுபுறம் கொடிய வறுமை. ஒருபுறம் அதிகார ஆடம்பரங்கள்; மறுபுறம் ஏழையர் இன்னல்; தொழிலாளர் துயரம். ஒருபுறம் மட்டுப்படாத செருக்கு; ஒருபுறம் அளவிடலாகாத சிறுமை. இது மேலைநாகரிக நிலை.

*　　*　　*

இந்தியாவிற்கு வரும் மேலைநாட்டினரில் பெரும்பாலார், மிதமிஞ்சிய நாகரிக இறுமாப்போடு வருகின்றார். இந்தியரிடமிருந்து தாங்கள் தெரிந்துகொள்ளத்தக்க விஷயங்களில்லை யென்பதே இவர்களது கொள்கை. மேற்றிசை நாகரிகத்தின் குறைகளை இந்த நாகரிகம் நிறைசெய்தல் கூடும் — என்ற நல்லுணர்ச்சி இவர்களுக்குக் கொஞ்சமும் இல்லை. மேற்றிசையார் சில விஷயங்களில் இந்தியரைப் பார்க்கிலும் திறமை வாய்ந்தவர்கள் என்பதில் ஐயமில்லை. ஆனால் அவை இரண்டாந்தர விஷயங்களே; முதல்தரமான ஆன்ம-விஷயங்களல்ல—என்று ஒரு பிரஞ்சு ஆராய்ச்சியாளர் கூறுகின்றார். அதிகச் செருக்கால் அழிந்தது இலங்கை — என்று கூறுவதுண்டு. மேலை நாகரிகம் இன்று அமிதமான செருக்கால் தடுமாறுகின்றது.

*　　*　　*

தன்னம்பிக்கை ஒரு மனிதனுக்கு எவ்வளவு இன்றியமையாததோ, அவ்வளவு ஒரு நாகரிகத்திற்கும் — ஒரு நாட்டிற்கும் இன்றியமையாததாகும். எனினும் தன்னம்பிக்கைக்குரிய 'தருக்கு' அல்லது பெருமிதம் வேறு; தற்புகழ்ச்சிக்குரிய செருக்கு வேறு. இந்தியா தன்னம்பிக்கையின்றி— பெருமிதமின்றி — வளர்ச்சிக்கு இன்றியமையாத 'தருக்கு' இன்றி — வாடுகின்றது. மேலைநாடுகளோ தற்புகழ்ச்சி செய்து கொண்டு—தாங்கமுடியாத செருக்கால்— கொழுத்து வருந்துகின்றன.

*　　*　　*

ஐரோப்பியர்தம் விடுதலைக்காதல், அன்னாரது செருக்கால், அதிகாரப் பெருஞ்செய்தின் 'குருட்டு' வழிபாடாக விளைகின்றது. இதனால் மேலைநாட்டுக் குடியாட்சிகளும், கொடிய ஆட்சிகளாகி, தடிப்பேறிய தேசிய உணர்வும் அளவுகடந்த நாட்டுக்காதலும் கொண்டு, பிறநாடுகளை அடிமைப்படுத்த முயல்கின்றன. அரசியலுக்கும் ஒழுக்க நெறிக்கும் யாதொரு தொடர்புமில்லை யென்பது மேலைநாட்டார் கொள்கை. என்ன குறைகளிருந்தாலும் எனது நாட்டை நான் காதலிக்கின்றேன்—என்று மேலைநாட்டான் கூறுகின்றான். தமது தாய்நாட்டின் செல்வாக்கு, செல்வப் பெருக்கு, அதிகாரப்பெருக்கு— இவற்றைக் குறித்து மேலைநாட்டாருள் ஒவ்வொருவனும் பெருமை பாராட்டிக் கொள்ளுகிறான். இவ்வாறே இந்திரசித்தனும் இராவணேச்வரனது திக்விஜயங்களைக் குறித்தும், இலங்கையின் வளமையினைக் குறித்தும், அரக்கர்தம் பொய்த்திருவினைக் குறித்தும், விபீஷணனிடம் மார்தட்டிப் பெருமைபேசினானாம். விபீஷணனோ தர்மமே அரசாங்கத்தைக் காட்டிலும்—தேசபக்தியைப் பார்க்கிலும்—உயர்ந்ததென்று சொன்னான். "இராவணன் பிழைசெய்தபோதே, அவன் பின் நான் பிறந்தே னல்லேன்; அவன் எனக்கு அண்ணனு மல்லன்; அரசனும் அல்லன்"— என்று விபீஷணன் விடையிறுத்தான். இந்திரசித்தன் விபீஷணனை 'தேசத்துரோகி' என்று பரிகசித்தான்.

*　　*　　*

அரசாங்கத்திலும் அறமே மேலானது; தேசபக்தியிலும் அருளொழுக்கமே சிறந்தது; இம்சையிலும் அஹிம்ஸையே உயர்ந்தது. பாவத்தோடு ஒத்துழைப்பதிலும் ஒத்துழையாமையே சிறந்த தருமம். இங்ஙனம் இன்று உலகினுக்கு உபதேசிக்கும் மகாத்மா காந்தி, ஆண்ட்ரூஸ், ரொமேன் ரோலந்த் போன்ற விபீடணர்களை நோக்கி நாகரிக 'இந்திரசித்தர்'கள் நகையாடுகின்றார். ஒழுக்கமே இராவணனையும் இலங்கையினையும்காப்பதாகும் என்று அறிஞருள் அறிஞனான விபீடணன் கூறினான். "அறநெறியே இன்று ஐரோப்பாவை அரசியல்—குழப்பங்களிலிருந்தும் காப்பதாகும்" என்று பேரறிஞரான ஆசிரியர் பெரெரோ (Ferrero) கூறுகின்றார். இந்திரசித்தனே வழக்கம்போல நகையாடுகின்றான்; தோள் கொட்டி ஆரவாரம் செய்கின்றான்.

*　　*　　*

"பரமான்மா (இறை-உயிர்) ஒன்றே, அதற்கு ஜாதியில்லை" என்று ரிஷிகள் கூறியுள்ளார்.

ஒப்புடையன் அல்லன்,
ஒருவன் அல்லன்,
ஓர் ஊரன் அல்லன்,
ஓர் உவமன் இல்லி

என்று அப்பர் அருளிச் செய்கின்றார். ஒரே இறை உயிர், பலநாடுகளிலும் பல ஜாதிகளிலும் நாற்றிசைகளிலும் கலந்து நிற்கின்றது. எனவே மக்கள் அனைவரும் சகோதரர்—ஒரே ஈசுவரகுடும்பத்தைச் சார்ந்தவர். இவ்வுண்மை யுணர்வினை இந்தியா மேலைநாடுகளுக்கு அருளொடு குழைத்து ஊட்டல் வேண்டும். இதுவே தற்கால நாகரிகம் இன்று வேண்டுகின்ற பொருளாகும்.

*　　*　　*

கைத்தொழில்—புரட்சியை நோக்கினாலும், தற்கால நாகரிகம் அற நெறியினின்றும் விலகியே செல்கின்றது என்பது நன்கு புலனாகும். இப்புதிய யுகத்தினை 'தொழில்—யுகம்' என்றும் கூறலதுண்டு. பண்டை நாளில் மனிதன் கையால் செய்த தொழில்களையெல்லாம், இயந்திரங்கள் எளிதில் செய்து விடுகின்றன. பெரியபெரிய தொழிற்சாலைகள்; பெரிய பெரிய நகரங்கள் செருக்கொடு வானை நோக்கி நிமிர்கின்றன. இவ் இயந்திர— நாகரிக எமனுக்கு—நவநாகரிக நரகங்களான நகரங்களிலே மக்கள் சிற்றடிமைப்பட்டு வாடுகின்றார். பொருள் உயர்கின்றது; போகம் பெருகுகின்றது; வேகம் அதிகரிக்கின்றது. ஆனால் நவநாகரிக மும்மூர்த்திகளின் பலி பீடங்களிலே, ஆன்மாக்கள் பலியாகின்றன. நாகரிக முதலாளிமார் தேடிக்குவிக்கும்பெரும்பொருளில், ஏழையர்—கண்ணீர், கலந்திருக்கின்றது.

*　　*　　*

தற்கால நாகரிக 'நோய்களு'க்கு மருந்து என்னை? ஆன்மசம்பத்தே, பொருட்செல்வத்தினும் பெரிதாகக் கருதப்படல் வேண்டும். வாணிபத்துறையிலும் அரசியல் துறைகளிலும், ஒழுக்கம் பொன்னே போல் போற்றப்படல் வேண்டும். ஆடம்பரமற்ற—எளிய—அற வாழ்வே வாழ்வாக மதிக்கப்பெறல் வேண்டும். தற்கால [illegible]வுக்காதலோடும் விடுதலைக்காதலோடும், அறப்பற்றும் 'பொய்தீர் ஒழுக்க நெறி' யும் தழுவிப்படர்தல் வேண்டும். அப்போது ஒரு புதிய மகாசக்தி தோன்றும். அதுவே உலகிலும் நமது நாட்டிலும் ஒரு புதிய யுகத்தினைத் தோற்றுவிக்கும்.

# இலக்கியப் பூங்காவனம்.

## குயில் பாட்டு.

மகாபூஷணம் எழுதுவது.

மேற்புலக் கலைகளின் கூட்டுறவின் பெரும் பயனாகப் பாரத தேசமும் தான் நெடுங்காலமாக ஆழ்ந்திருந்த பெருந் துயிலிலிருந்து படிப்படியாக விழித்துக்கொள்ள ஆரம்பித்தது. தேசம் எங்கும் புத்துணர்ச்சியும் புது நோக்கங்களும் பரவலாயின. தமிழ் நாடும் இந்த நவ வேகத்தைத் தன் இதயத்திலே பெற்றுத் தமிழ் மக்களிடம் சுதந்திர தாகத்தையும் பாஷாபிமானத்தையும் பொழுதொரு வண்ணமாக வளரச் செய்தது. இத்தமிழ்ப் புது வாழ்வை ஒளியுறச் செய்த அறிஞர் ஒரு சிலர். இவர்களில் தலைசிறந்தவர் சுப்பிரமணிய பாரதி. பாரதி தமிழ்ப்பெரும் புலவர் வரிசையிலே முன்னணியில் இடம்பெறும் தகுதி யுடையவர்.

பாரதியாரின் இன்சுவை-விந்தைப் பாக்களில் "குயில் பாட்டு" என்பது ஒன்று. இக்குயிலின் அற்புதக் காதற் கதை, ஆசிரியன்

> முன்னிக் கவிதை வெறி
> மூண்டே நனவழியப்
> பட்டப் பகலிலே
> பாவலர்க்குத் தோன்றுவதாம்
> நெட்டைக் கனவின்
> நிகழ்ச்சியிலே ……… "

கண்டதோர் மோகனக் கனவாகும். உண்மைக் காதல், எத்தனை இடையூறுகள் நேரிடினும் அவற்றை யெல்லாம் வேரோடலைத்து வெற்றிபெறும் என்பதே இக்கவிக் கனவின் உபதேசமாகும். "காதல் வழி தான் கரடு முரடா மென்பர்." ஷேக்ஸ்பியர் என்னும் கவிச் சக்கரவர்த்தியும் "The course of true love never runs smooth" என்கிறார். ஆனாலும் காதலின் சாசுவதமான வெற்றியைப் பற்றிச் சிறிதும் ஐயமுற வேண்டுவதில்லை.

> காதல், காதல், காதல்,
> காதல் போயிற் காதல் போயிற்
> சாதல், சாதல், சாதல்.

என்ற காதல்—கானத்தின் பல்லவி வாசகரின் உள்ளத்திலே இடையீடின்றி ஒலிக்கத் தொடங்கிவிடுகிறது. காதலர் இருவர்—ரோமியோ, ஜூலியத் என்னும் பெருங்காதலரைப்போல் அதிர்ஷ்ட மற்றவர்—தங்கள் பேரின்பக் காதல் வாழ்வின் ஆரம்பத்திலேயே மரணத்தால் இணைபிரிகின்றனர். காதலன் இறக்குந் தறுவாயில்,

> சாவிலே துன்பமில்லை.
> தையலே இன்னமு நாம்
> பூமியிலே தோன்றிடுவோம்.
> பொன்னே நினைக்கண்டு
> காமுறுவேன். நின்னைக்
> கலந்தினிது வாழ்ந்திடுவேன்
> இன்னும் பிறவியுண்டு
> மாதரசே இன்பமுண்டு
> நின்னுடனே வாழ்வேன்
> இனி நேரும் பிறப்பினிலே.

என்று கூறும் மொழிகள் காதலின் நிலைபெற்ற ஜெயத்தின் முரசொலியாகும். அடுத்த பிறப்பிலும் அவ்வுண்மைக் காதலரைத் துன்புறுத்தும் பேய்களும் மாயங்களும் பல. இப் பொய்மைப் பிசாசங்களையும், மாயைகளையும் கிழித்துக்கொண்டு காதல்-கதிரவன் ஒளி செய்கிறான். இதுவே "குயில் பாட்"டின் கதையாகும்.

> காலை யிளம் பரிதி
> வீசுங் கதிர்களிலே
> நீலக் கடலோர்
> நெருப்பெதிரே சேர்மணி போல்
> மோகனமாஞ் சோதி
> பொருந்தி முறை தவறு
> வேகத் திரைகளினால்
> வேதப் பொருள் பாடி
> வந்து தழுவும்
> வளஞ்சார் கரையுடைய

என்று காம்பீரியத்துடனும் பேரழகுடனும் தொடங்கி,

> நாசக் கதையை
> நடுவே நிறுத்தி விட்டுப்
> பேசுமிடைப் பொருளின்
> பின்னே மதி போக்கிக்
> கற்பனையும் வர்ணனையும்
> காட்டிக் கதைவளர்…

த்தலின்றி ஆசிரியன் கதை நடத்திச் செல்லும் சிறப்பு நம்மனத்தை ஆகர்ஷித்து விடுகிறது. கதை முடிவில், கவிஞனின் 'சோலை-குயில்-காதல்' கனவெல்லாம் திடீரென்று மறைந்துவிட, விழிதிறந்து பார்க்கையிலே,

> சூழ்ந்திருக்கும் பண்டைச்
> சுவடி, எழுதுகோல்
> பத்திரிகைக் கூட்டம்,
> பழம்பாய் வரிசை யெல்லாம்
> ஒத்திருக்க 'நாம் வீட்டில்
> உள்ளோம்' எனவுணர்ந்தேன்"

என்ற கனவு-நீக்கம் பரிதாபகரமாக இருக்கிறது. கவியும் சிறிது மனந்தேறித் தன் பகற் கனவு,

> மாலையழகின் மயக்கத்தால் உள்ளத்தே
> தோன்றியதோர் கற்பனையின் சூழ்ச்சி"

யென்று கண்டுகொள்ளுகிறான்.

கதையும் கதை சொல்லும் முறையும் இவ்வாறாகக் 'குயில் பாட்டின்' கவிதை நம்மைப் பிரமிக்கச்செய்து உள்ளத்தை அடிமை கொண்டுவிடுகிறது. கதை நடத்தும் முறைச் சிறப்பிற்காகவன்று; மனிதர் உணர்ச்சிகளையும் எண்ணங்களையும் பெயர்த்துச் சொல்லும் திறமைக்காகவுமன்று; மற்றுக் கவிதை என்ற முறையிலேயே இக்"குயில் பாட்டை" இங்கு நாம் எடுத்துக் கொண்டது. இவ் "இன்னிசைத் தீம்பாடலிசைத்திருக்கும் விந்தை தலையே" இங்கு நாம் மதிப்பிடப் புகுந்தது.

> கானப் பறவை கலகலெனும்
> ஓசையிலும்
> காற்று மரங்களிடைக்
> காட்டு மிசைகளிலும்
> ஆற்றுநீ ரோசை,
> அருவி யொலியினிலும்
> நீலப்பெருங்கடலெந்
> நேரமுமே தானிசைக்கும்
> ஒலத்திடையே
> யுதிக்கு மிசையினிலும்
> மானுடப் பெண்கள்
> வளருமொரு காதலினால்
> ஊனுருகப் பாடுவதி
> லூறிடுந்தேன் வாரியிலும்
> ஏற்றநீர்ப் பாட்டின்
> இசையினிலும், நெல்லிடிக்குங்
> கோற்றொடியார் குக்கு வெனக்
> கொஞ்சு மொலியினிலும்
> சுண்ண மிடிப்பார்தஞ்
> சுவைமிகுந்த பண்களிலும்
> பண்ணை மடவார்
> பழகுபல பாட்டினிலும்
> வட்டமிட்டுப் பெண்கள்
> வளைக்கரங்கள் தாமொலிக்கக்
> கொட்டி யிசைத்திடுமோர்
> கூட்டமுதப் பாட்டினிலும்
> ……………………
> ……………நெஞ்சைப்
> பறிகொடுத்தேன் பாவியேன்

என்ற குயிலின் அமுதமொழிகள், நமது கவிஞன் பிரகிருதியின் பேரெழில்களிலும், மனிதர்களின் இன்பக் களியாட்டின் மோகனத்திலும் ஈடுபட்டுக் கவிதை யுள்ளம்பெற்றதை எத்தனை அழகுடனும் இனிமையுடனும் சித்திரிக்கின்றன! இவ்வாறு கவிதை பயின்ற இதயம், பிரகிருதியின் போதிசயங்களிலே முதன்மைத்தான சூரியோதயத்தைப் பாடுகையில் காலைக் கதிரழகின் கற்பனைகளிலே பொருந்தி,

> தங்கமுருக்கித் தழல்
> குறைத்துத் தேனாக்கி
> எங்கும் பரப்பியதோர்
> இங்கிதமோ?… என்றும்,
> புல்லை நகையுறுத்திப்
> பூவை வியப்பாக்கி
> மண்ணைத் தெளிவாக்கி
> நீரில் மலர்ச்சி தந்து
> விண்ணை வெளியாக்கி
> விந்தைசெயுஞ் சோதியினை

என்றும் கூறும் பூர்ணமான கவிதை தமிழிலக்கியத்தையே என்றும் ஒளி செய்து நிற்கும். இன்னும் குயில் புள்ளுரு நீங்கிப் பெண்ணுரு எய்திய ஆச்சரிய மாயையை,

> கோலத்தைக் காணவில்லை
> விண்டுரைக்க மாட்டாது
> விந்தையடா!. விந்தையடா!
> ஆசைக்கடலினமுதடா! அற்புதத்தின்
> தேசமடா! பெண்மைதான்
> தெய்விகமாங் காட்சியடா!

என்று கவி பாடிச்செல்கிறார். அப்பெண்ணரசியின்

> மீள விழியில்
> மிதந்த கவிதை யெல்லாம்
> சொல்லி லகப்படுமோ?………
> கவிதைக் கனிபிழிந்த
> சாற்றினிலே பண்கூத்
> தெனு மிவற்றின் சாரமெலாம்
> எற்றியதனூடே
> யின்னமுதைத்தான் கலந்து
> காதல் வெயிலிலே
> காயவைத்த கட்டியினால்
> மாதவளின் மேனி
> வகுத்தான் பிரமனென்பேன்

என வரும் அடிகளை ரஸம் சொட்டும் கவிதையின் எல்லையென்றே சொல்லி விடலாகும்.

"குயில்பாட்"டில் கவிதாரஸமே பிரதான மாவது என்று சொன்னோம். இதன் அற்புதக் கவிதையையும் செஞ்சொல் இன்பத்தையும் கானத்தையும் பருகிய நாம், இப் பாட்டின் மற்றைய அழகுகளை மறந்துவிடக் கூடாது, குயிலின் விந்தைக் குரலிலும் இன்னிசைப் பாட்டிலும் பரவசமான காதல்—கவிஞன்,

> மனிதவுரு நீங்கிக்
> குயிலுருவம் வாராதோ?
> இனிதிக் குயிற்பேட்டை
> யென்றும் பிரியாமல்
> 'காதலித்துக் கூடிக்
> களிப்புடனே வாழோமோ?
> நாதக் கனலினிலே
> நம்முயிரைப் போக்கோமோ?

என்று ஏங்குதல் எத்தனை பொருத்தமாக இருக்கிறது! இனி நமது கவியின் நகைச் சுவையைப்பற்றி ஓரிரண்டு மொழிகள் கூறி நமது வியாசத்தை முடித்துவிடுவோம். குயில் குரங்கினிடம் கூறும்,

> மேனி யழகினிலும்
> விண்டுரைக்கும் வார்த்தையிலும்
> கூனியிருக்கும்
> கொலுநேர்த்தி தன்னிலுமே,
> வானரர்தஞ் சாதிக்கு
> மாந்தர் நிகராவாரோ?

என்ற காதல்—வார்த்தைகள் எத்தனை பெருநகைப்புண்டு பண்ணுகின்றன! இன்னும்,

> (மனிதர்) மீசையையும் தாடியையும்
> விந்தைசெய்து வானரர்தம்
> ஆசைமுகத்தினைப்போல்
> ஆக்கமுயன் றிடினும்
> ஆடிக்குதித்தும்
> அழகிலுமை நேர்வதற்கே
> கூடிக்குடித்துக் குதித்தாலும்………
> … … … … … … … … … …
> வானரர்போலாவாரோ?
> வாலுக்குப்போவதெங்கே?

என்றும்

> சைவசுத்த போஜனமும்
> சாதுரியப் பார்வைகளும்
> வானரர்போற் சாதியொன்று
> மண்ணுலகின் மீதுளதோ?

என்றும் வரும் குயிலின் உரைகள் எத்துணை பரிகாசமும் ஆசியமும் கொண்டு ஒலிக்கின்றன.

குயில்பாட்டு பாரதியாரின் இன்னிசை கொட்டும் கவியின்பம் பயின்ற நூல்களிலே சிறந்தவொன்றாகும். கவியின்பத்திலும் கான ரசத்திலும் 'கண்ணன் பாட்டு' ஒன்றனுக்கே இக்குயிற்கதை சிறிது இளைக்கிறதென்று சொல்லவேண்டும். படிப்பில்லாத தமிழர்களும் பொருள் தெரிந்து மனமுருகுமாறு எளிய பதங்கள் எளிய சந்தங்களைக்கொண்டு உயர்ந்த கவிதை செய்து தந்து சுப்பிரமணிய பாரதி தமிழிலக்கிய மறுமலர்ச்சியைச் சிறக்தொளிரச் செய்தார். தமிழர்கள் அவர் கவிகளைப்பாடியும் படித்தும் தங்கள் வாழ்க்கையைக் கவிமயமாகவும் இன்பமயமாகவும் செய்துகொள்வார்களாக.

---

## இடி மின்னல்.

"சேம்பர்ஸ் ஜர்னல்" என்னும் பத்திரிகையில் மிஸ்டர் பி. ஹால் என்பவர் எழுதுவதன் சாரமாவது:—

ஒரு நாளில் ஒவ்வொரு விநாடியும் உலகில் ஏதேனுமோர் இடத்தில் மின்னல் மின்னி இடி இடித்துக்கொண்டிருப்பதாகக் கணக்கிட்டிருக்கிறார்கள். மின்னல் என்பது என்ன? இடி என்பது யாது? என்று கவனிப்போம். மின்னல் என்பது பிரமாண்டமான ஒரு நெருப்புப்பொறி. அது அளவிடப்படாத வெப்பமுடையது; சுமார் ஒரு மைலும் அதற்கு மேலும் நீளம் உள்ளது. அது ஆகாயவெளியிற் பாய்ந்து செல்லும்போது, அஃது ஊடுருவிச் செல்லுங் காற்று மிரம்ப உஷ்ணமாகிறது. குளிரினால் பொருள்கள் சுருங்குவதும், உஷ்ணத்தினால் விரிவதும் இயல்பாதலால் அப்போது காற்று விரிவடைகிறது. திடீரென்று காற்று விரியும்போது உண்டாகும் சத்தத்தையே நாம் இடிமுழக்க மென்கிறோம். ஒரே ஒரு மின்னலில் எவ்வளவு மின்சார சக்தி வீணாகிறது என்பதை எண்ணினால் நாம் திடுக்கிட்டுப்போவோம். ஒரு மின்னலில் வீணாகும் மின்சார சக்தியைக் கொண்டு ஒரு பெரிய பட்டணத்திற்கு ஒரு வாரம் முழுவதிற்கும் விளக்குப்போடலாமாம். ஒருமணி நேரம் சேர்ந்தாற்போல் மின்னல் மின்னினால் அப்போது வீணாகும் மின்சார சக்தி ஒரு மாதத்திற்கு லண்டன் நகரத்தின் எல்லா விளக்குகளை ஏற்றவும், எல்லா டிராம் வண்டிகளையும் என்ஜின்களையும் ஓட்டவும் போதுமாம். பூமியிலும் மேகங்களிலும் மின்சார சக்தி நிறைந்து ததும்பி வெடித்துப்போகும் நிலைமை ஏற்படும்போதுதான் இடி மின்னல் உண்டாகிறது. அதாவது அதிகப்படியான மின்சார சக்தி மின்னல் மூலம் வெப்ப சக்தியாக மாறிப் பின்னர் அவிந்துபோகிறது. பூமியிலும் ஆகாய வெளியிலும் இவ்வளவு மின்சார சக்தி எப்படி வருகிறது என்று மட்டும் இதுகாறும் திட்டமாகக் கண்டுபிடிக்கப்படவில்லை.

---



## எங்கே காணலாம்?

ந. வீரப்பன் எழுதியது :—

கடவுளைப்பற்றி, பலதிறப்பட்ட கருத்து வேற்றுமைகள் நமது நாட்டில் நிலவுகின்றன. மனப் போக்கிற்கு ஏற்றவாறு இறைவன் உருவத்தைக் கூறுகிறார்கள். சைவர்கள், நாகாபரணத்தோடு, தலையில் சந்திரன், சூரியன், கங்கை முதலியன அணிந்து கொண்டு கையில் மழு, திரிசூலம், நெருப்பு, உடுக்கு முதலியன தாங்கிக் கொண்டு இறைவன் இருப்பதாகக் கூறுகின்றனர். வைஷ்ணவர்கள் சங்கு சக்கரத்தோடு மகாவிஷ்ணு விளங்குவதாகக் கூறுகின்றனர். அவர்களை வணங்க வேண்டுமெனின், கோயிலுக்குச் சென்று தாகர் மூலம் தான் தரிசிக்க வேண்டுமென்று செப்புகின்றனர். மதத்திற்குரிய அடையாளங்களின்றி இலங்குபவரைக் காணில் அவர்பால் சீற்றங் கொள்ளுகின்றனர். இவ்விதம் சிலரிருக்க, கோயிலுக்குச்செல்பவரைக்கண்டு நகையாடுவோரும், சமய அடையாளங்களைக்கண்டு சின முறுகின்றவர்களும் சிலரிருக்கின்றனர். இவ்விரு சாராரின் கூற்றும் வெறுக்கத் தக்கதே.

கோயில்கள் தள்ளத்தக்கனவல்ல. கோயில் அறிவில்லாத பாமாஜனங்களுக்குக் கடவுளின்மேல் பக்தி உண்டாகுமாறு செய்வதற்குஏற்பட்ட ஓர் கருவியேயன்றி வேறன்று. ஆனால் இன்று கோயில்களில் பல அக்கிரமங்கள் நடைபெறுகின்றன. அவைகளைப் போக்க முயலவேண்டுமேயன்றி, கோயில்களை வெறுப்பது முறையாகாது.

இறைவன் கோயிலில் மட்டுந்தான் உறைகின்றான் என்று எண்ணுவது பேதைமையாகும். இறைவன் எங்கும் நிறைந்து எல்லாமாய் விளங்குகின்றான். பூமியும் அவனே; நெருப்பும் அவனே; நீரும் அவனே; காற்றும் அவனே; சந்திரனும் அவனே; சூரியனும் அவனே. இங்ஙனம் என்றும் அழியாது எவ்வுருவமும் தன்னுருவமாய் விளங்கும் பரம்பொருளை ஒரு குறிப்பிட்ட இடத்தில் தான் இருக்கின்றான் என்று கூறுவது எங்ஙனம் பொருந்தும்?

> இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி
> இயமானனா யெறியுங் காற்று மாகி
> அருநிலைய திங்களாய் ஞாயி றாகி
> ஆகாசமாய் அட்ட மூர்த்தியாகிப்
> பெருநலமும் குற்றமும் பெண்ணும் [ஆணும்
> பிறருருவுந் தன்னுருவுந் தானே யாகி
> நெருநலையாய் இன்றாகி நாளை யாகி
> நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே.

என்று நாவுக்கரசர் நவில்கின்றார். இறைவனை எல்லாப் பொருளிலும் கண்டு இன்புறுகின்றார். எதை நோக்கினும் அது இறைவன் வடிவமாகவே நாவுக்கரசரின் திருக் கண்களுக்குப் புலப்படுகின்றது.

இறைவனை எல்லாப் பொருள்களிலும் கண்டு இன்பம் அனுபவித்தலே உண்மையாய்க் கடவுளிடத்துச்செலுத்தும் பேரன்பாகும். இறைவன் ஒவ்வோர் அணுவிலும் வதிகின்றானென்பதை ஒவ்வொருவரும் உணர்தல் வேண்டும். சிறுவர் உள்ளத்தில் இறைவன் இருக்கின்றான். பேசுகின்ற சொல்லிலிருக்கின்றான். எழுதுகின்ற எழுத்திலிருக்கின்றான். எல்லாவற்றிலும் இறைவன் நீக்கமற நிறைந்து விளங்குவதை ஒவ்வொருவரும் கண்டுகளித்தல் வேண்டும்.

> கோடையிலே இளைப்பாற்றிக்
> கொள்ளும் வகைகிடைத்த
> குளிர்தருவே தருநிழலே
> நிழல்கனிந்த கனியே
> ஓடையிலே ஊறுகின்ற
> தீஞ்சுவைத் தண்ணீரே
> உகந்த தண்ணீ ரிடைமலர்ந்த
> சுகந்தமண மலரே
> மேடையிலே வீசுகின்ற
> மெல்லியபூங் காற்றே
> மென்காற்றில் விளைசுகமே
> சுகத்திலுறும் பயனே
> ஆடையிலே யெனைமணந்த
> மணவாளா பொதுவில்
> ஆடுகின்ற அரசேயென்
> அலங்கலணிந் தருளே.

என்று இராமலிங்க சுவாமிகள் கூறுகின்றார். இயற்கைப் பொருள்களில் இறைவனைக்கண்டு களித்து, தாம் பெற்ற பேரின்பத்தினை ஏனையோரும் அனுபவித்தல் வேண்டுமென்னும் பேரன்போடு அழகிய—இனிய கவியால் வருணித்துள்ளார். இவ்வண்ணமே ஒவ்வொருவரும் இறைவனைச் சகலமான பொருள்களிலும் காண முயலவேண்டும். இறைவன் எங்குமிருக்கிறான் என்னும் திண்ணை வேதாந்தம்பேசாது, உண்மையில் எங்குமிருப்பதைக் கண்டு களித்தல் வேண்டும்.

இறைவனைக் காண்பதற்குத் தாகர்கள் வேண்டுவதில்லை. பொருள் செலவழிக்க வேண்டுவதில்லை. எம்மொழியாலும் அழைக்கலாம். எவ்வேடத்தோடுமிருக்கலாம். மந்திரம் வேண்டுவதில்லை. தந்திரம் வேண்டுவதில்லை. எங்குங்காணலாம். எனவே அன்பர்கள் ஒவ்வொரு பொருளிலும் இறை-அழகினைக் கண்டுகளித்து, பேரின்பம் எய்த முற்றுவார்களாக.

---

## கண்ணம்மா—என் காதலி.

### (பின்னே வந்து நின்று கண் மறைத்தல்.)

பாரதி பாடியவை.

> மாலைப் பொழுதி லொரு மேடைமிசையே
> வானையுங் கடலையும் நோக்கி யிருந்தேன்
> மூலைக் கடலினை யவ் வான வளையம்
> முத்த மிட் டேதழுவி முகிழ்த்தல் கண்டேன்
> நீல நெருக்கிடையில் நெஞ்சு செலுத்தி
> நேரங் கழிவதிலும் நினைப் பின்றியே
> சாலப் பலபல நற பகற் கனவில்
> தன்னை மறந்த லயந் தன்னி லிருந்தேன்
>
> ஆங்கப் பொழுதிலென் பின்புறத்திலே
> ஆள்வந்து நின்றெனது கண் மறைக்கவே
> பாங்கினில் கை யிரண்டும் தீண்டியறிந்தேன்
> பட்டுடை வீசுகமழ் தன்னி லறிந்தேன்
> ஓங்கி வரு முவகை யூற்றி லறிந்தேன்
> ஒட்டு மிரண்டுளத்தின் தட்டி லறிந்தேன்
> வாங்கி விடடி கையை யேடி கண்ணம்மா
> மாய மெவரிடத்தில்? என்று மொழிந்தேன்
>
> சிரித்த ஒலியி லவள் கை விலக்கியே
> திருமித் தழுவி, என்ன செய்தி சொல்லென்றேன்
> "நெரித்த திரைக்கடலில் என்ன கண்டிட்டாய்?
> நீல விசும்பினிடை என்ன கண்டிட்டாய்?
> திரித்த நுரையினிடை என்ன கண்டிட்டாய்?
> சின்னக் குமிழிகளில் என்ன கண்டிட்டாய்?
> பிரித்துப் பிரித்து நித மேக மளந்தே
> பெற்ற நலங்க ளென்ன? பேசுதி" என்றான்
>
> "நெரித்த திரைக்கடலில் நின்முகங் கண்டேன்
> நீல விசும்பினிடை நின்முகங் கண்டேன்
> திரித்த நுரையினிடை நின்முகங் கண்டேன்
> சின்னக் குமிழிகளில் நின்முகங் கண்டேன்
> பிரித்துப் பிரித்துநித மேக மளந்தே
> பெற்றதுன் முகமன்றிப் பிறிதொன்றில்லை.
> சிரித்த ஒலியினிலுன் கை விலக்கியே
> திருமித் தழுவியதில் நின்முகங் கண்டேன்."

---

## ரசாயன சாஸ்திர வெற்றி.

மோட்டார் வண்டிகளுக்கும், ஆகாயக் கப்பல், விமானம் முதலானவைகளுக்கும் ஒரு விதமான ஸ்பிரிட் என்ற எண்ணெய் உபயோகிக்கப்படுகின்றது; இது நெருப்பைக் கண்டவுடன் பற்றிக்கொள்ளும். எண்ணெயை வண்டியில் ஊற்றவாவது, அல்லது போதுமான அளவு வண்டியில் இருக்கிறதா என்றாவது விளக்கு வைத்துக் கொண்டு பார்ப்பது ஆபத்தான காரியம். ஒரு ருஷ்ய எஞ்ஜினியர் பிரான்சில் நெருப்புப் பற்றாத ஒரு வகை ஸ்பிரிட்டை உண்டுபண்ணி யிருக்கிறாராம். அதை பிரான்சுதேசக் கப்பற் படை அதிகாரிகள் நன்றாகப் பிரிசோதித்துப் பார்த்திருப்பதாகவும், அதிலே நெருப்புப் பற்றவில்லையென்பதாகவும், அதை நெருப்பிலூற்ற நெருப்பே யணைந்துபோனதாகவும் கூறப்படுகிறது. ஆகாய விமானத்துக்கு இப்படித் தீங்கில்லாத ஸ்பிரிட் அகப்பட்டால் மிகவும் உபயோகமுள்ளதாயிருக்கும். நெருப்புப் பற்றாத ஸ்பிரிட் நித்தியப்படியான உபயோகத்துக்கு வேண்டிய அளவு உற்பத்திசெய்ய முடியுமானால் இது ரசாயன சாஸ்திரத்திற்குப் பெரிய வெற்றியே. இப்படிப்பட்ட ஆராய்ச்சி முறைதான் பலருக்கும் உபயோகப் படக்கூடியது. இம்மாதிரி ஆராய்ச்சியில்தான் இந்தியர்கள் பயிற்சிசெய்து கொள்ளவேண்டுமென ஆசிரியர் பி. ஸி. ராய் பிரசங்கங்களில் வற்புறுத்தி வருகிறார்.

---

## ஜான் ராக்பெல்லர்.

'தமிழ்நாடு' எழுதுவது :—

ஸ்ரீமான் ஜான்டேவிசன் ராக்பெல்லர் உலகத்தில் ஒருபெரிய தனவந்தர். அவருடைய வருஷ வருமானம் [illegible] தேசத்தைப்போன்ற ஒருபெரிய இராஜ்யத்தைப் பரிபாலனம் செய்யக்கூடிய அவ்வளவு பணமாக இருக்கிறதாம். உலக சரித்திரத்திலேயே இவரைப்போல் பணம் சேகரித்தவர் வேறு யாருமில்லையாதாம். கட்டுக்கதைகளில் சொல்லப்பட்டிருக்கும் குபேரன் முதலியோர்கள் இவருக்கு ஒப்பாகமாட்டார்கள். சுமார் அ௰ வருஷங்களுக்கு முன் இவர் குடிசையில் வசித்துவந்தார். பின்னல்தான் மண் எண்ணெய் வியாபாரத்தில், ஸ்ரீமான் ராக்பெல்லர் சுத்தப்படுத்தாத எண்ணெய் மார்க்கட்டுகளில் விலையாகிறதில்லை என்பதைக் கவனித்தார்.

உடனே எண்ணெயைச் சுத்தப்படுத்துவதற்காக ஒரு ஸ்தலத்தை ஏற்படுத்தினர். தன்னுடன் ஸ்ரீமான் ஆண்ட்ரூஸ் என்பவரையும் கூட்டு வியாபாரியாகச் சேர்த்துக்கொண்டார். ஆரம்பத்திலேயே இவர்களுக்கு மிகுந்த வெற்றி கிடைத்தது. சுத்தப்படுத்தப்பட்ட எண்ணெய்க்கு எங்கும் பிரிய மிருந்தது. இவர்கள் இரவு பகலாக வேலை செய்தும் வெளியிலிருந்துவரும் கிராமங்களுக்கு இவர்களால் கொடுத்து முடியவில்லை. அதனால் வேறொரு சாலையை ஏற்படுத்தினர்கள். அப்படியிருந்தும் அவர்களால் சாக்குக் கொடுத்து முடியவில்லை. இதற்குள் ஸ்ரீமான் ராக்பெல்லர் ஏராளமாய்ப் பணம் சமபாதித்துவிட்டார்.

இத்துடன் சுரங்கவேலை, ரயில் ரோட்டு வேலை முதலியவைகளில் ஏராளமான பணம் லாபம் கிடைத்தது. இப்படிச் சேகரிக்கப்பட்ட பொருள் அவருக்கு ஒருவிதமான இன்பத்தையும் கொடுத்ததாகஇல்லை. மேலும் மேலும் சம்பாதிப்பதே அவருக்குச் சந்தோஷம். அவரது செல்வம் இவ்வுலகத்திலுள்ள சுகானுபோகங்களைச் சிறிதும் அவருக்குக் கொடுக்கவேயில்லை. அவருடைய வாழ்க்கைக்கு வருஷத்துக்கு ரூ.00 பவுன்தான் செலவு. அதைக் கொண்டே அவர் திருப்தியும் சந்தோஷமும் அடைவார். செல்வம் ஒரு மனிதனுக்கு உண்மையான சந்தோஷத்தைக் கொடுக்கமுடியாதென்பதும், பணம் சம்பாதிப்பது பிரதான காரியம் அல்லவென்பதும் அவருடைய கருத்து. பணம் நற்காரியங்களைச் செய்வதற்கு இடையூறாயிருக்கிறது. உலகத்தில் தனவந்தர்களிலும், ஏழைகளிலும், கெட்டவர்களைக்காணலாம். தனவந்தர்களில் அநேகர் தங்கள் பொருளைப் புண்ணியப் பொருளாகக் கருதுகிறார்கள். ஸ்ரீமான்ராக்பெல்லர் தம்முடைய பொருளால் அடைந்த நன்மையென்னவென்றால், பிறருக்கு உதவவேண்டுமென்பதே. அவர் இப்பொழுது வயோதிகப் பருவத்தை அடைந்துவிட்டார். இவரைப்போல் ஒருவரும் இவ்வளவு பணம்சேகரித்தவர் இல்லை. இன்றைக்கு ஸ்ரீமான் ராக்பெல்லர் தன் வீட்டில் ஒரு கைதியைப்போல் இருக்கிறார். அவருக்குத் தாவதுதீங்குநேராதபடி இரவும் பகலும் ஓயாமல் ஆயுதபாணிகள் சுற்றிக் காத்துக்கொண்டிருக்கிறார்கள். அவருடையவீட்டில் எத்தனையோ தனவந்தர்கள்செல்வத்தினால் ஏற்படும்செருக்கைப்பற்றி ஆலோசனை செய்துகொண்டு அங்குமிங்கும் உலவிக்கொண்டிருக்கிறார்கள். அவர் சம்பாதித்த பொருள்களில் பெரும்பாகத்தை மானிடர்களின் நன்மைக்கே செலவிட ஆரம்பித்திருக்கிறார்.

## செழிப்பான இந்தியா.

லிங்கன் நகர வியாபாரிகள் சங்கத்தில் வெளிநாட்டு வியாபார மந்திரியான மிஸ்டர் ஏ. எம் சாமுவேல் என்பார் கீழ்காணுமாறு பேசியிருப்பதாக அறிவிக்கப்படுகிறது:—

"நம் நாட்டில் (இங்கிலாந்தில்) உற்பத்தி செய்யப்படும் சாமான்களை வழக்கமாக வாங்கும் நாடுகளுள் இந்தியாவே சிறந்தது. பிரதி வருஷமும் இந்தியா நம்மிடமிருந்து ஏறக்குறைய ௯ கோடி பவுன் பெறுமானமுள்ள சாமான்கள் வாங்குகின்றது. இச்சாமான்கள் தயாரிக்கும் தொழிற்சாலைகளில் பிரிட்டிஷ் தொழிலாளர்கள் ஏராளமாக வேலை செய்கின்றனர். நமது இந்திய வியாபாரம் இன்னும் அதிகப்படுவது நமக்கு மிகுந்த நன்மை பயக்கும். ஏனெனில் தொழிற்சாலைகளில் நம் நாட்டுத் தொழிலாளர்கள் ஏராளமாக வேலை செய்ய வசதி யேற்படும். அதன் பயனாகத் தற்பொழுது நடைபெற்று வரும் அரசாங்கத்தின் முக்கிய கொள்கையாகிய வேலையில்லாத் திண்டாட்டத்தைக் குறைத்தல் நிறைவேறும்."

"இந்திய நாடு நம்மிடமிருந்து ஏராளமான இரும்புச்சாமான்களும் உருக்குச் சாமான்களும் ரயில்வே தளவாடங்களும் வாங்கியிருக்கின்றது. இந்தியா மிகச் செழிப்பாக விருந்தது. இறக்குமதிச் சாமான்களை அதிகமாக வாங்கப்போதிய செல்வம் படைத்திருந்தது. தனது நோக்கத்திற்குத் தகுந்தவாறு விலை குறையும் வரை இந்தியா காத்துக்கொண்டிருந்தது. லிங்கன் பகுதியிலுள்ள பல வியாபாரக் கம்பெனிகளுக்கு இந்தியாவில் நல்ல விற்பனை நடந்து வருகின்றது, பிரதிநிதி ஸ்தாபனங்களும் இருந்து வருகின்றன. எனினும் இந்திய அரசாங்கப் பிரதிநிதிகள், இந்தியாவில் திறமையான பிரதிநிதிகளை அக்கம்பெனிகள் ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டனர். உயர்தரமானதும் சிக்கலானதுமான இயந்திரங்களை விற்பதற்கு அவற்றில் நிபுணராயிருப்பவர்கள் அவைகளைப்பற்றிய விவரங்கள் அனைத்தையும் தெரிவிக்கும் பொருட்டு இந்தியாவில் இருக்க வேண்டுவது அவசியம். விற்பனை செய்வோருக்கு, ஒப்பந்தங்கள் செய்து கொள்ளுவதில் உதவியாகவிருக்க நிபுணர்கள் அவசியம் தேவை. விலைக்குக் கொடுக்கப்படும் இயந்திரங்களைப் பற்றி விளக்குவதற்கு, அவைகளை வாங்கும் எஞ்சினீயர்களுடன் பிரிட்டிஷ் நிபுணர்கள் பழக்கம் உள்ளவர்களாயிருத்தல் வேண்டும். இந்தியாவில் இறக்குமதி செய்யப்பட்டுள்ள இயந்திரங்களுள் நூற்றுக்கு ௮௦ விகிதம் நாமே அனுப்பியுள்ளோம். பிரிட்டிஷ் வியாபாரக் கம்பெனிகளுள் பலவற்றிற்கு இந்தியாவில் ஏஜண்டுகள் இருக்கின்றனர். பிரிட்டிஷ் நிபுணர்கள் அங்கிருக்கின்றனர். அவ்வாறிருந்தும், இந்தியாவில் இயந்திரம் வாங்கும் அதிகாரிகள் தாங்கள் எதிர்பார்க்கிறபடி பிரிட்டிஷ் நிபுணர்களின் உதவி தங்களுக்குக் கிடைப்பதில்லையென்று கூறி வருகின்றனர். இந்தியாவில் போதிய அளவுக்கு, இயந்திரங்களும், அவற்றின் பகுதிகளும், கிடைக்கக்கூடியவாறு நாம் செய்வதில்லையென்றும் அவர்கள் குறைகூறுகின்றனர்.

"விவசாய இயந்திரங்கள் சம்பந்தப்பட்ட மட்டில் பிரிட்டிஷ் கம்பெனிகள் இந்தியாவில் அவற்றைப்புகுத்தி விற்க எவ்வளவோ பாடுபட்டன. எனினும் போதிய அளவு பயன்கிட்டவில்லை, இந்திய அரசாங்கத்தாரும் இந்தியவிவசாயிகளுக்கு உதவிசெய்ய எவ்வளவோபாடுபட்டு வருகின்றனர். அவர்களுக்கு நல்ல விவசாய ஏத்தனங்கள் அளிக்கின்றனர். விவசாயக் கூட்டுறவுச்சங்கங்கள் ஏற்படுத்துகின்றனர். விவசாயத்தளவாடங்களைப் பழுதுபார்க்கக் கற்றுக்கொடுக்கின்றனர். அவற்றை வாங்கும்படி உபதேசிக்கின்றனர்."

நாம் செழிப்பானநிலையிலேயே இருந்து வருகிறோமென்றும், இங்கிலாந்தில் தயாரிக்கப்படும் இயந்திரங்களனைத்தையும், அவை விவசாயத்திற்கு உபயோகப்படும் இயந்திரங்களாயினும் சரி, வேறு இயந்திரங்களாயினும்சரி, நாம் வாங்குவதாலும், பிரிட்டிஷ் நிபுணர்களை வேலைக்கு அமர்த்திக்கொள்ளுவதாலும் நமது செல்வ நிலை இன்னும் செழிப்படையுமென மிஸ்டர் ஸாமுவேல் நிச்சயமாக நம்புகிறார். அவரது இவ்விருகூற்றுக்களும் எவ்வளவு தூரம்பொய் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? இந்தியாசெழிப்பான நிலையிலில்லை யென்பதையும், நாளுக்குநாள் வறுமைநிலை யடைந்துவருகிறதென்பதையும் நாம் நன்கு அறிவோம். பிரிட்டிஷ் இயந்திரங்களைத் தங்குதடையின்றி வாங்குவதாலாவது, பிரிட்டிஷ் நிபுணர்களையோ வேறு அந்நியநாட்டு நிபுணர்களையோ நியமித்துக் கொள்ளுவதாலாவது இந்தியாவின் வறுமை ஒருக்காலும் நீங்கப்போவதில்லை யென்பதை நம்மில் சிலர் அறிவர். சில ஆண்டுகளுக்கு முன்னர் கோபாலகிருஷ்ண கோகலே அவர்கள் கூறியதுபோல், இவ்வித இறக்குமதி நமதுவளர்ச்சியைக்குறைக்கின்றது. நாம் நாளுக்குநாள் கேவலமான நிலையையே அடைந்து வருகின்றோம். பல கைத்தொழில்களையும் நாமே செய்யக் கற்றுக்கொண்டு அவற்றில் நிபுணத்துவம் அடைவதோடு நமது தேவைக்குத் தகுந்த இயந்திரங்களையும் நாமே தயாரித்துக்கொள்ளவேண்டும். மேனாட்டவர்களைப் போல் இவ்விஷயங்களில் நடிக்கமுயலுவது அதாவது அவ்வியந்திரங்களைப் போல் இங்கு உற்பத்திசெய்யமுயலுவது நாமாகச் செய்யும் ஆற்றலையும், நமது திறமையையும் அழிக்கும்; சௌகரியமாக வாழும் தன்மையையும் கொல்லும். தற்போது விசாரணைநடத்திவரும் விவசாயக்கமிஷன் போன்ற அரசாங்கத்தாரால் நியமிக்கப்படும் கமிஷன்களின் நோக்கத்தில்ஜனங்களுக்கு ஸாமுவேல் அவர்கள் நிகழ்த்திய பிரசங்கம் போன்ற சொற்பெருக்குகள் சந்தேகத்தை உண்டாக்குகின்றன.

## மகாத்மாவின் மணிவாசகம்.

"யங் இந்தியா"விலிருந்து மொழிபெயர்க்கப் பட்டது.

### யாவற்றிலும் மேலான நலம்.

"யங் இந்தியா"ப் பத்திரிகையைத் தவறாது படித்துவரும் அன்பர் ஒருவர் கீழ்காணும் விஷயத்தை அனுப்பியுள்ளார்:—

"கீழ்காணும் பத்திரிகைச்செய்தியொன்றைத் தங்களுக்கு அனுப்புகின்றேன். ஒருவருஷ காலத்திற்கு முன் அது பிரசுரிக்கப்பட்டதாகும். 'இதுவோ மனித நீர்மை?' எனும் தலைப்பின் கீழ் நீங்கள் எழுதிவரும் கட்டுரைகளில், சிற்சில சந்தர்ப்பங்களில் உயிர்வதை செய்ய வேண்டுவது கடமையாகின்றது என்று குறிக்கும் உங்களது கொள்கையைப் பிரஸ்தாப வியாஸம் ஆதரிப்பதாகத் தோன்றுகிறது. நவம்பர் மாதம் ௩-ம் நாள் வெளியாயுள்ள நான்காவது கட்டுரையில் குறிப்பிட்டிருக்கும் கொள்கைக்கு இது சிறப்பாகப் பொருத்தமாயிருக்குமெனத் தெரிகிறது. பிரஸ்தாப வியாஸம் வருமாறு:—

(டைம்ஸ் ஆப் இந்தியா'வுக்காக எழுதப்பெற்றது.)

விட்டில்டன் (கொலராடோ)

நவம்பர் ௩. (௧௯௨௫)

'சுமார் ௬௪ வயதுள்ள நாட்டுபுறத்திலுள்ள வைத்தியரான ஹாரோல்டு பிளேஸர் என்பவர் தனது மகளை குளோரபாரம் கொடுத்துக் கொன்றுவிட்டார். தனது மரணம் சமீபத்தில் நேருமென்றும் எனவே தனக்குப் பின் தனது மகளைப் பராமரிப்பவர் எவருமில்லை யென்றுங் கருதியே அவர் அவ்வாறு செய்தார். கொலைக் குற்றத்திற்காக அவர் விசாரிக்கப்பட்டு இறுதியில் விடுதலை செய்யப்பட்டார். விடுதலை செய்யப்படுமுன், ஜூரிகள் ௧௭-மணி நேரம் கூடி யோசித்தும் ஒரேவிதமான முடிவிற்கு வராத காரணம் பற்றி போலீஸாரே வழக்கைத் தள்ளிவிட வேண்டுமெனக் கோரினர். ௧௭-மணி நேரம் யோசித்தபின்னர் ஜூரிகளில் ௧௧ பேர் அவரை விடுதலை செய்ய வேண்டுமென்று அபிப்பிராயப்பட்டனர். ஏனையோர் மாறுபட்டனர். டாக்டர் பிளேஸர் அவர்களது வக்கீலான மிஸ்டர் ஹெளரி என்பார் கூறியதாவது:— 'மற்றவர்கட்கு ஒரு சுமையாக விருக்கக்கூடாதெனக் கருதி ௨௨ வருஷங்கள் வரைதானே பரிபாலித்து வந்த தனது மகளை அவர்தானே கொன்றது மிகமிகச்சரியாகும். அவரது செயல்நியாயமேயாகும். கார்காயில் எனும் இப்பெண்ணுக்குக் கைகால்கள் கிடையா; பேசவோ எண்ணவோ முடியாது, நன்கு முன்னரே சுவைக்கப்பட்டுள்ள ஆகாரத்தைக் கொண்டே போஷிக்கவேண்டும். இத்தகைய துர்ப்பலமான பெண்ணுக்கு ஆன்மா இருக்கமுடியாது."

"சென்ற ஆண்டு இதே காலத்தில் பாரிஸில்நடைபெற்றவழக்கொன்றைப்பற்றிப் படித்ததாக எனக்கு ஞாபகமிருக்கிறது. ஓர் நாடக மாது தனது காதலனை அவனது வேண்டுகோளுக்கிணங்க சுட்டுக் கொன்றுவிட்டாள். அவன், கடுமையான, குணப்படுத்த முடியாதென்று கருதத்தக்க நோயால் துன்புற்றுக்கொண்டிருந்தான். அங்ஙனம் மாதின்மீது கொலைக் குற்றத்திற்கு வழக்குத் தொடரப்பட்டு நடத்தப்பட்டது. பிரஸ்தாப சந்தர்ப்பங்களால் ஏற்பட்ட நிலையைக் கருதுமிடத்து அவள் எவ்வித குற்றமும் செய்யவில்லையென ஜூரிகள் அபிப்பிராயப்பட்டதற்கிணங்க விடுதலை செய்யப்பட்டாள். அத்தகைய தீர்ப்பை யாதரிக்கக்கூடிய சட்டமெதுவும் பிரான்ஸ் தேசத்தில் அமுலிலில்லாதிருப்பதாகத் தோன்றினும், டென்மார்க் தேசத்தில், அதிகாரம் பெற்ற நபர்கள் சிலர், மேற்கூறியது போன்ற சந்தர்ப்பங்களில் மனித வதை செய்யலாமென்ற சட்டமொன்று இருப்பதாக நான் படித்ததாக எனக்கு ஞாபகமிருக்கிறது. இவ்விரு வழக்குகளின் விவரங்களும் தங்களுக்கும் என் போன்ற 'யங் இந்தியா வாசகர்களுக்கும் படிக்க ஆர்வமாகவிருக்குமென்று நம்புகிறேன்"

எனது நிலையை விளக்குவதற்கு உபயோகப்படுவதாயிருப்பதால் இக் கடிதத்தினை நான் வெளியிடுகின்றேன். இந்நிருபர் 'யங் இந்தியா'ப் பத்திரிகையை வெகு கவனமாகப் படிப்பவர். இத்தகைய ஒருவர், அவரது கடிதத்திலிருந்து நன்கு தெரிவதுபோல், எனது நிலையைத் தவறாக உணர்ந்துகொள்ளுவாரெனின், எப்பொழுதாவது படிப்பவர்கள் எத்தனை பேர் அவ்வாறு தவறாக உணர்ந்துகொண்டிருப்பார்கள் என்று சொல்லவும் வேண்டுமோ? ஹிம்ஸையில் பிரவேசிக்கும்படி நம்மைச் செய்யும் நமது பரம்பரையான குரூரத்தன்மையால் அபாயம் நேரக்கூடுமென்று பல வாசகர்கள் எனக்குத் தெரிவித்திருக்கிறார்கள். நுட்பமான விஷயங்களில் ஒருவர் வெகு ஜாக்கிரதையாக மட்டுமே ஆராய்ச்சிசெய்ய முடியும். அவர் கூறுவது தவறாகக் கையாளப்படும் என்ற பயமெதுவும், மூலாதாரக் கொள்கைகளைத் தாராளமாக நியாயமான முறையில் விவாதிப்பதைத் தடைசெய்ய முடியாது. நான் சம்பந்தப்பட்டமட்டில், வணக்கமாக விவாதிப்பதாலும் பிறர் அபிப்பிராயங்களைத் தெரிந்துகொள்ளுவதாலும் மட்டுமே சரியான விஷயங்களை அறிந்துகொள்ளுவேன், அதன்படி நடப்பேன். நான் குறிப்பிட்டுள்ள இக்கடிதம் விவாதத்திலுள்ள விஷயத்திற்கு ஓர் உதாரணமாகும். ஒரே கொள்கையை விளக்கிக் கூறுவதில் அந்நிருபருக்கும் எனக்குமுள்ள அபிப்பிராய பேதத்தினை இவ்விவாதம் நன்கு விளக்கிவிட்டது.

நான் கூறியுள்ள விதிப்படி டாக்டர் பிளேஸர் விடுதலை செய்யப்பட்டது நியாயமெனினும்அவர்தனது மகளைக்கொன்றது பெருங்குற்றமென்றே நான் கருதுகின்றேன். அவரது செயல் அவரைச் சுற்றிலுமுள்ள மனித வருக்கத்தாரிடம் அவருக்கு நம்பிக்கையில்லாமலிருப்பதையே காட்டுகின்றது. மற்றவர்கள் அவரது மகளைப் பராமரிக்க மாட்டார்கள் என்று அவர் எண்ணுவதற்கு எவ்வித காரணமுமில்லை. தற்போதையசந்தர்ப்பத்தில் நாய்கள் விஷயத்தில் நான் கொண்டுள்ள நிலை பிளேஸர் கொண்டுள்ள நிலைக்கு முக்கியாம்சங்களில் மாறுபட்டதாகும். ஓர் முட்டாளுக்கு ஆன்மா இல்லையெனும் வாதத்தினை நான் ஏற்றுக்கொள்ள முடியாது. இழிபிறவிகளுக்குங்கூட ஆன்மா உண்டு என நான் நம்புபவன்.

மற்றோர் வாசகர் கூறும் கஷ்டம் இதைவிட அதிக கவனத்திற்குரியதாகும். அவர் கூறுவதன் சாரம் வருமாறு:—

"நீங்கள் மேற்கொண்டுள்ள நிலையை நான் பாராட்டுகின்றேன். உங்களது வாதம், பெரும்பாலோரது நன்மையின் பொருட்டு பெரும் பான்மையான நன்மை இருக்கவேண்டுமென்போரது கொள்கையோடு பொருந்துகிறதன்றோ? அதுவே உங்களது நிலைமையெனின், தங்களது அஹிம்ஸாக் கொள்கைக்கும், உயிர்வதையால் பெரும்பாலோருக்கு நன்மை ஏற்படுகிறதெனின் அவ்வாறு செய்யலாமெனக் கூறும் கொள்கைக்கும் ஏதேனும் வித்தியாஸமுண்டா?"

முதலாவதாக, வெளித்தோற்றத்தில் செயல்கள் இரண்டும் ஒன்றாகத் தோன்றிய போதிலும், அச்செயல்களுக்கு மூலகாரணமாயிருக்கும் அம்சங்களுக்குத் தகுந்தாற்போல் அவற்றின் தன்மை வேறுபடும். இவ்வாறாக அஹிம்ஸை யென்பது மேனாடுகளில் மனித வருக்கத்தாரோடு மட்டும் நின்றுவிடுகிறது. அதுவுங்கூட முடிந்தவரையில்தான். மனித வருக்கத்தாரின் நலத்துக்கென்று சொல்லப்படுவதை முன்னிட்டு சாஸ்திர அறிவு பெறுவதற்காகவாவது, அல்லது, உபயோக முள்ளதாயிருக்கவேண்டுமென்ற கொள்கையின் பெயரால் வதைக் கருவிகளைச் செய்து குவிப்பதற்காகவாவது உயிருள்ள ஜீவஜெந்துக்களை வதைப்பதில் எவ்வித ஜீவகாருண்யமும் காட்டப்படுவதில்லை. பலரது நன்மைக்காக எது வேண்டுமாயினும் செய்யலாம் என்ற கொள்கைப்படி செய்யப்பெறும் செயலோடு பொருந்திய



வதைச்செயலொன்றை அஹிம்ஸாக் கொள்கையுள்ளவரொருவர் செய்திருக்கக் கூடும், எனினும், அவர் சாஸ்திர அறிவு பெறுவதற்காக ஜீவன்களை வதைசெய்யவோ அல்லது வதைக்கருவிகளைச் செய்து குவிக்கவோ ஒருப்படுவதைக் காட்டிலும் தன் உயிரை இழக்க ஒருப்படுவர்.

அஹிம்ஸாக் கொள்கையுடையோர் பலர் நலங்கருதி எவ்விதவதையும் செய்யலாமெனுங் கொள்கையை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். அவர்கள் எல்லோரது நலத்திற்காகவும் பாடுபடுவார்கள். அந்த லட்சியத்தை யடையப் பாடுபடுவதில் தம் உயிரையுங் கூட இழப்பார்கள். தான் மரணமடைவதாலேயே மற்றவர்களுடன் அவர்கள் தொண்டு செய்வார்கள். இதனால் பெரும்பாலோருக்கு நன்மையேற்படும். இங்ஙனமாகப் பலரது நன்மைக்காக எவ்வித வதையும் செய்யலாம் என்ற கொள்கையுடையோருக்கும், அஹிம்ஸாக் கொள்கையுடையோருக்கும் பல செயல்களில் பொருத்தமிருக்கலாம். எனினும் ஓர் காலத்தில் அவர்கள் பிரிந்து ஒருவருக்கொருவர் மாறாக வேலை செய்யவேண்டிவரும். பலரது நலங்கருதி எவ்வித வதையும் செய்யலாம் எனும் கொள்கையுடையோர் தங்கள் உயிரை ஒருகாலும் தியாகம் செய்ய ஒருப்படமாட்டார். முழு உண்மையினையும் கவனிப்பவர் தம் உயிரையும் தியாகம் செய்வர். இத்தகையோர் ஓர் நாயைக் கொல்லுவதெனின், நிடசித்தமின்மையாலாவது அல்லது நாயின் நலத்தை முன்னிட்டாவது தான் அவ்வாறு செய்கின்றார். நாயின் நன்மைக்கு உரியதெது, நன்மையில்லாதது எது என்பதை நிர்ணயிப்பது மிகவும் அபாயகரமானதோர் விஷயமாகும். எனவே அவர்கள் மிகப் பெரிய தவறுகள் செய்துவிடவுங் கூடும். அவ்வாறு செய்யப்படும் தவறைக்கொண்டு அவரது நோக்கத்தைத் தவறாக நிர்ணயிப்பது பொருத்தமற்றதாகும். பலனொன்றையே பெரிதுங் கருதுவோர் செய்யும் வதை மிக மிகக் குறுகிய நோக்கம் கொண்டதாகவேயிருக்கும். அவர்களது செயல்களுக்கு வரம்புகிடையாது. அஹிம்ஸா முறைப்படி கவனிப்பின் கடந்த மகாயுத்தம் முற்றும் தவறான விஷயமாகும். பலனொன்றையே கருதுவோரது முறைப்படி இருதிறத்தவரும் தத்தம் செயல்அவரவர்போக்குப்படி நியாயமென்றே கருதினர். ஜாலியன் வாலாபாக்படுகொலையுங்கூட, மேற்கூறியமுறைப்படி நியாயமென்றே அக்கொலைக்குக் காரணமாயிருந்தவர்கள் கூறினர். இவ்வாறே கலகக்காரர்கள் தாங்கள் நிகழ்த்தும் கொலைகள் நியாயமெனக் கூறுகின்றனர். எனினும் இச்செயல்களில் எதுவும் எக்கொள்கையின் தன்மையை முன்னிட்டும் நியாயமாகக் கொள்ளப்படமாட்டாது.

### இமயமலை உச்சியிலிருந்து.

தனது ஜீவிய காலம் முழுதும் இந்திய பள்ளத் தாக்குகளில் வசித்துவந்த ஓர் நண்பர் இப்பொழுது இமயமலைப் பகுதியில் இருக்கின்றார். அங்கு பனி மூடியிருக்கும் மலைச்சரிவின் வனப்பைக்கண்டு வியந்து கீழ்காணும் மேற்கோள் உரைகளையனுப்பியுள்ளார்:—

"உலகிற்கப்பாலுள்ள மகா மோனத்தில் கிடந்து, தூரத்தாலும் பனியாலும் பயங்கரமாகி, சொற்களால் சித்தரிக்க முடியாத பேரழகோடு பொலிவதாயிருக்கும் இமயமலைக்கு எத்தகைய உவமை கூறலாம்? ஏன்? இப்பனிமலை முழுவெண்ணீறு பூசிய முனிபுங்கவனைப்போல் தியானத்திலும் மோனத்திலும் தன்னை யிழந்து தனிமையாக நிற்கின்றது. இன்னும் இம்மலைத் தொடர் மகாதேவனும் தனிப் பெருஞ் சுடருமாகிய சிவபெருமானை ஒத்து நிற்கின்றது."

"இறைவனதுவிச்வரூப வழிபாட்டின் உண்மையான பார்வை மோனமேயாகும்" என்று ஹோம்ஸ் என்பார் மோனத்தைப் பற்றிப் புகழ்ந்து கூறும் உரையோடு முற்றுப் பெறுகின்றது.

## அடிகளின் உண்மைவாழ்வு.

உண்மைப் புயல்.

மூன்றாம் பாகம்.

அதிகாரம் உ.

(காந்தியடிகள் "நவஜீவனில்" எழுதி வரும் தற்சரிதம்.)

### மஞ்சள்கொடி.

இருகப்பல்களும் டர்பன் துறைமுகத்தில் டிஸம்பர் மாதம் ௧௮-ம் தேதி வாக்கில் வந்து சேர்ந்தனவெனத் தெரிந்துகொண்டோம். ஒவ்வொரு பிரயாணியும் நன்கு வைத்திய பரிசோதனை செய்யப்படாமல் எவரும் தென்னாப்பிரிக்காவிலுள்ள எந்த துறைமுகத்திலும் இறங்கஅனுமதிக்கப்படுவதில்லை. தொத்துநோயால் வருந்தும் எப்பிரயாணியாவது கப்பலிலிருப்பின், அக்கப்பல் குறிப்பிட்ட காலம் ஒதுக்கிவைக்கப் பட்டிருக்க வேண்டும். நாங்கள் புறப்படுங்காலத்தில் பம்பாயில் பிளேக் நோய் பரவியிருந்தமையால் சிறிது காலம் நாங்கள் ஒதுக்கிவைக்கப் பட்டுவிடுவோமோவென நாங்கள் அஞ்சினோம். வைத்தியபரிசோதனைக்கு முன்னர் ஒவ்வொருகப்பலும் மஞ்சள் கொடிதாங்கிக் கொண்டிருக்கவேண்டும். கப்பலிலுள்ளவர் எவரும் தொத்துநோயால் வருந்தவில்லையென வைத்தியர் அறிவித்த பின்னர் அம்மஞ்சள் கொடி இறக்கப்படும். மஞ்சள்கொடி இறக்கப்பட்ட பின்னரே பிரயாணிகளது சுற்றத்தாரும் நண்பர்களும் கப்பலுக்குவர அனுமதிக்கப் படுவார்கள்.

### உண்மைக் காரணம் சுகாதாரமல்ல.

இவ்வாறே வைத்தியர் எங்களைப் பரிசோதிக்கவரும்பொழுது எங்களது கப்பலில் மஞ்சள் கொடி பறந்துகொண்டிருந்தது. ௫-தினங்கள் கப்பல் ஒதுக்கிவைக்கப் பட்டிருக்கவேண்டுமென்று அவர் உத்திரவிட்டார். பிளேக்கிருமிகள் மனிதரைப் பற்றிக்கொண்டு நோய்காண ௨௩-தினங்கள்வரை பிடிக்குமென அவர் அபிப்பிராயப்பட்டதே மேற்கூறிய உத்திரவிற்குக் காரணம். எனவே எங்களது கப்பல் பம்பாயிலிருந்து புறப்பட்டு ௨௩-தினங்கள் கழியும் வரை ஒதுக்கிவைக்கப் படவேண்டுமென உத்திரவிடப்பட்டது. இத்தகைய உத்திரவிற்கு மூல காரணம் சுகாதாரப் பாதுகாப்பல்ல.

### வெள்ளையரின் கிளர்ச்சி.

டர்பனிலுள்ள வெள்ளையர்கள் எங்களைத் திரும்ப இந்தியாவிற்கு அனுப்பிவிட வேண்டுமென்று கிளர்ச்சிசெய்துகொண்டிருந்தனர். பிரஸ்தாப உத்திரவிற்கு அக்கிளர்ச்சியும் ஓர்காரணமாகும். நகரத்தில் அன்றன்று நிகழும் விவரங்களையெல்லாம் தாதாஅப்துல்லா கப்பெனியார் எங்களுக்கு அறிவித்துக்கொண்டிருந்தனர். வெள்ளையர்கள் பிரதிதினமும் பெருங்கூட்டங்கள் கூடிக்கொண்டிருந்தனர். பலவிதங்களிலும் பயமுறுத்திக்கொண்டிருந்தனர். சிற்சில சமயங்களில் எங்களை இந்தியாவிற்கு அனுப்பிவிடும்படி தாதாஅப்துல்லா கம்பெனியாரைத் தூண்டிக்கொண்டிருந்தனர். அவ்வாறு அனுப்பின் நஷ்ட ஈடுகொடுப்பதாகக் கூறினர். என்றாலும் இத்தகைய பயமுறுத்தல்களுக்கெல்லாம், தாதாஅப்துல்லா கம்பெனியார் பயப்படக்கூடியவர்களல்ல. அப்பொழுது சேத்அப்துல் கரீம் ஹாஜி ஆதம் என்பவர் அக்கம்பெனியின் நிர்வாகப்பங்காளியாயிருந்தார். எப்படியாவது கப்பலைத்துறைமுகத்திற்குக் கொண்டுவந்து பிரயாணிகளை இறக்குவதென்று அவர் தீர்மானித்திருந்தார். அவர் ஒவ்வொரு நாளும் விவரமான கடிதங்கள் அனுப்பிக்கொண்டிருந்தார். காலஞ்சென்ற திரு மன்ஸுக் லால் நாஸர் அவர்கள் என்னைச்சந்திக்க டர்பன் நகருக்குவந்திருந்தார். அவர் மிகுந்த திறமைவாய்ந்தவர்; பயமில்லாதவர்; இந்திய சமூகத்தவருக்குத் தலைமைவகித்து அவர்களை நடத்திவந்தார். அவர்களது அட்வகேட்டான மிஸ்டர் லாப்டன் என்பவர் அவரைப்போல் அச்சமில்லாதவரே. அங்குள்ள வெள்ளையர்களின் நடத்தையை அவர் பெரிதும் கண்டித்தார், கூலிக்குமாரடிப்பவர்போலின்றி, இந்தியர்களின் உண்மை நண்பராகவிருந்து அவர்களுக்குப்பெரிதும் உதவிசெய்தார்.

### பெரும் போராட்டம்.

இவ்வாறாக டர்பன் நகரம் நிகரற்றதோர் போர்க்களமாக விருந்தது. நிர்க்கதியான இந்தியர்களும், சில ஆங்கில நண்பர்களும் ஓர் புறமாகவும், கல்வி, செல்வம், போர் ஆயுதங்கள், தொகை ஆதியவற்றில்மிகுந்துள்ள வெள்ளையர்கள் மற்றோர் புறமாகவுமிருந்தனர். வெள்ளையர்களுக்கு அரசாங்கத்தாரின் உதவியிருந்தது. நேட்டால் அரசாங்கத்தார் பகிரங்கமாகவே அவர்களுக்கு உதவி செய்துவந்தனர். மந்திராலோசனை சபை யங்கத்தவருள் மிகுந்த செல்வாக்குள்ள மிஸ்டர் ஹாரிஸ் எஸ்கோம்பே என்பவரும் வெள்ளையர்களது கூட்டங்களில் பகிரங்கமாகக் கலந்துகொண்டார்.

### மிரட்டல்.

கப்பல்களை ஒதுக்கிவைத்ததன் உண்மை நோக்கம் எப்படியாவது பிரயாணிகளை துன்புறுத்தியோ அல்லது கப்பல் கம்பெனி ஏஜண்டுகளைப் பயமுறுத்தியோ அவர்களை இந்தியாவிற்குத்திரும்பியனுப்பிவிட வேண்டுமென்பதேயாம். 'நீங்கள் இந்தியாவிற்குத் திரும்பிச் செல்லாவிட்டால் நிச்சயமாக கடலில் அமிழ்த்தப்படுவீர்கள். நீங்கள் இந்தியாசெல்ல ஒருப்படுவீர்களாயின் கப்பல் செலவுப் பணமுங்கூட உங்களுக்குக் கிடைக்கும்' என்று எங்களை (பிரயாணிகளை) பயமுறுத்தத் துவங்கி விட்டனர். நான் அடிக்கடி மற்றப் பிரயாணிகள் இருக்குமிடம் சென்று அவர்களுக்கு உற்சாக மூட்டிக்கொண்டிருந்தேன். 'நாதரி' கப்பலிலுள்ள பிரயாணிக்கும் ஆறுதல் செய்திகள் அனுப்பிக்கொண்டிருந்தேன். எல்லோரும் அமைதியாகவும் உறுதியாகவுமிருந்தனர்.

### எனது பிரசங்கம்.

பிரயாணிகளைச் சந்தோஷிக்கச் செய்ய வேண்டி, கப்பலில் எல்லாவிதமான களியாட்டங்களும் ஏற்பாடு செய்திருந்தோம். கிறிஸ்துமஸ் தினத்தன்று, முதல் இரண்டாவது வகுப்புப் பிரயாணிகளைக் கப்பல் தலைவர் விருந்துக்கு அழைத்திருந்தார். அவ்வாறு அழைக்கப்பட்டிருந்தவர்களுள் என்னையும் எனது குடும்பத்தாரையும் முதன்மையாகச் சொல்லலாம். விருந்திற்குப் பின்னர் பிரசங்கங்கள் நடைபெற்றன. அதில் மேனாட்டு நாகரிகத்தைப்பற்றி நான் பேசினேன். ஆத்திரமாகப் பேசுதற்கு அது ஏற்ற தருணமல்ல. எனினும் நான் வேறுவிதமாகப் பேச முடியாது. களியாட்டத்தில் நான் கலந்து கொண்டேன். எனினும், டர்பனில் நடந்துகொண்டிருந்த போராட்டத்திலேயே எனது இதயம் இருந்து கொண்டிருந்தது. ஏனெனில், நானே அங்குள்ள வெள்ளையர்களின் இலக்காக இருந்துகொண்டிருந்தேன். என்மீது இரு குற்றங்கள் சுமத்தப்பட்டிருந்தன. அவைகளாவன:—

(க) இந்தியாவிலிருக்கையில் நேட்டால் வெள்ளையர்களை இழிவாகப் பழித்துக் கொண்டிருந்ததாக.

(உ) நேட்டாலை இந்தியர் மயமாக்கும் பொருட்டே அங்கு குடியேற இரு கப்பல்கள் நிறையப் பிரயாணிகளை அழைத்து வந்திருப்பதாக.

### எனது பொறுப்பு.

எனது பொறுப்பை நான் நன்குணர்ந்திருந்தேன். என்பொருட்டு தாதாஅப்துல்லா கம்பெனியார்மீதிருந்த ஆபத்திற்குள்ளானதையும், கப்பல்பிரயாணிகளின் உயிருக்கு அபாயம் நேர்ந்திருந்ததையும், என்னுடன் எனது குடும்பத்தையும் அழைத்து வந்திருந்ததால் அவர்களது நிலைமையும் அபாயகரமாயிருந்ததையும் நானறிவேன்.

### நான் ஏதுமறியேன்.

எனினும் நான் சிறிதும் குற்றமில்லாதவன். எவ்விதகுற்றமும் செய்யவில்லை. நேட்டால் செல்லும்படி நான் எவரையும் தூண்டவில்லை. அவர்கள் கப்பலில் புறப்படுங்காலத்தில்அவர்களில் எவரையும் எனக்குத் தெரியாது. எனது இருஉறவினர்களல்லாதவேறுபிரயாணிகளுள்ஒருவரது பெயராவது விலாஸமாவது எனக்குத் தெரியாது. நான் நேட்டாலிலிருக்கையில் அங்குள்ள வெள்ளையர்களைப்பற்றிக் கூறாத எதையும் புதிதாக இந்தியாவில் கூறிவிடவில்லை. நான் கூறியவற்றிற்கெல்லாம் தக்க ஆதாரங்கள் என்னிடமிருந்தன.

### மேனாட்டு நாகரிகம்.

எனவே நேட்டால் வெள்ளையர்கள் எந்த மேனாட்டு நாகரிகத்தின் அம்சமாக விளங்கினரோ, எந்தமேனாட்டு நாகரிகத்திற்காகப் போராடுகின்றனரோ, அம்மேனாட்டு நாகரிகத்தை நினைத்து பெரிதும் வருந்தினேன். இந்நாகரிகமே என்மனத்தில் முதன்மையாக இருந்துகொண்டிருந்தது. எனவே அச்சிறுகூட்டத்தின்முன் அந்நாகரிகம்பற்றி யான்கொண்டிருந்த அபிப்பிராயத்தைக் கூறினேன். கப்பல் தலைவரும் ஏனைய அன்பர்களும் நான் கூறியதைப் பொறுமையாகச் செவிமடுத்தனர். அச்சொற் பொழிவு அவர்களது வாழ்க்கையின்போக்கைஎவ்விதத்திலும் மாற்றியதா என்பது எனக்குத்தெரியவில்லை. பின்னர் கப்பல் தலைவரோடும், பிற உத்தியோகஸ்தர்களோடும் மேனாட்டு நாகரிகத்தைப்பற்றிப் பல தடவைகள் பேசிக்கொண்டிருந்தேன். மேனாட்டுநாகரிகம்கீழ்நாட்டுநாகரிகத்தைப் போலல்லாது, ஹிம்ஸையையே முக்கிய ஆதாரமாகக்கொண்டிருக்கிறதென எனது பிரசங்கத்தில் குறிப்பிட்டிருந்தேன். அவர்களது வினாக்கள் எனது கொள்கையில் நான் இன்னும் அதிகப் பற்றுக்கொள்ளும்படி செய்தன. அவர்களுள் ஒருவர் (கப்பல் தலைவர் என்றே எனக்கு ஞாபகமிருக்கிறது.) சிரித்துக்கொண்டே கேட்டார்:—

"வெள்ளையர்கள் தாங்கள் பயமுறுத்தியபடி செய்துவிட்டார்களெனில் அஹிம்ஸாக் கொள்கையில் நீங்கள் எவ்வாறிருக்கமுடியும்?"

"போதிய பலத்தையும் நிதானத்தையும் அவர்களைச் சட்டப்படி தண்டிக்க முன்வராமல் அவர்களை மன்னித்துவிடும் தன்மையையும் கடவுள் எனக்களிப்பாரென்று நான் நம்புகிறேன். அவர்கள் மீது எனக்குச் சிறிதும் கோபமில்லை. அவர்களது அறியாமைக்கும் குறுகிய நோக்கத்திற்கும் வருந்துகிறேனே யன்றி வேறல்ல. தாங்கள் செய்வது நியாயமானவை, சரியானவை என்று அவர்கள் உண்மையாக நம்பியிருக்கின்றனரென்பது எனக்குத் தெரியும். எனவே அவர்கள்மீது நான் கோபமடையச் சிறிதும் காரணமில்லை."

என்று அவ்வினாவிற்கு விடையிறுத்தேன். அவர் புன் முறுவலுற்றார். வெறுப்போடேயே அவ்வாறு செய்திருக்கக்கூடும்.

### கணக்கில்லை.

இவ்வாறாக நாட்கள் சென்றுகொண்டிருந்தன. கப்பல்கள் ஒதுக்கிவைக்கப்பட்டிருந்த காலம் கணக்கில்லாமல் நீண்டுகொண்டே யிருந்தது. ஒதுக்கிவைக்க உத்திரவிட்ட அதிகாரி, விஷயம் தனக்கு மேலானவர்கள் வசம்போய்விட்டதென்றும், அரசாங்கத்தாரிடமிருந்து உத்திரவு கிடைத்ததும் கப்பலை விட்டு இறங்க எங்களை அனுமதிப்பதாகவும் தெரிவித்தார்.

### இறுதிச்செய்தி.

கடைசியாகக் கப்பல் பிரயாணிகளுக்கும் எனக்கும் வெள்ளையர்கள் இறுதிச்செய்தியொன்று அனுப்பினர். நாங்கள் உயிருடன் தப்பவேண்டுமேயில் அவர்கள் கட்டளைக்கு இணங்கவேண்டுமென்று கூறப்பட்டது. நேட்டால் துறைமுகத்தில் இறங்க நமக்கு உரிமை உண்டென்றும் எவ்வித கஷ்டத்திற்குட்பட்டாயினும் நேட்டால் பிரதேசத்தில் நுழைய உறுதிகொண்டிருப்பதாகவும் நானும் இரு பிரயாணிகளும் பதிலனுப்பினோம்.

### வெற்றி

இருபத்துமூன்று தினங்களுக்குப் பின்னர் இருகப்பல்களும் துறைமுகத்திற்குச் செல்லவும் பிரயாணிகள் கப்பல்களிலிருந்து இறங்கவும் அனுமதி கொடுக்கப் பட்டது.

## உள்ளுறை.



நாளென் செயும்! வினைதா னென்
செயும்! எனைநாடி வந்த
கோளென் செயும்! கொடுங்கூற்
றென் செயும்! குமரேசரிரு
தாளுஞ் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்குமுன்
னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.


குமரன், காரைக்குடி.
அட்சயஞு மார்கழிமீ அவ


## வெள்ளையரின் : : : : வெஞ்சினம்.

கல்கத்தா ஐரோப்பிய சங்கத் தலைவர் திரு. லாங்போர்ட் ஜேம்ஸ், சங்கத்தின் சார்பாக இராஜப் பிரதிநிதியாருக்கு நடைபெற்ற விருந்தில், ஒரு சொற்பொழிவு செய்தார். அவ்வமயம் விஜயம் செய்திருந்த ஐரோப்பிய கனவான்களுக்கெல்லாம வயிற்றுக்கு விருந்தோடு செவிக்கும் விருந்து கிடைத்தது. உபந்யாசகர் உள்ளத்தே ஆத்திரமும் கோபமும் கடலெனப் பொங்கி யெழுந்தன. அவர் 'வாய்தரத்தக்க சொல்லி,' வைசிராயையும் பிறரையும் தம் வசம் செய்ய முயன்றார். ஆனால் 'ஆத்திரக்காரனுக்குப் புத்திமட்டு' என்னும் பழமொழி காலங்கண்ட அறிவுக் களஞ்சியமன்றோ? திரு. லாங்போர்ட் ஜேம்ஸின் பேச்சைக்கேட்டு, வழக்கமாக அவரைத் தழுவி நிற்கும் ஐரோப்பியர்களும் பிரமித்துப்போய் விட்டார்கள்.

பம்பாயிலிருந்து வெளிவரும் 'டைம்ஸ் ஆப் இந்தியா' இக்கூத்தினைக் கேட்டு அதிசயமடைந்து, 'பீங்கான் சாமான்கள் நிறைந்துள்ள கடையிலே மடமடவென்று நுழைந்த காளைமாடு' போல மிஸ்டர் ஜேம்ஸ் நடந்து கொண்டாரென்று எழுதுகின்றது. மேலும் அப்பத்திரிகை 'கல்கத்தா ஐரோப்பிய சங்கம் தன் சொந்த அபிப்பிராயத்தையே வெளியிட்டுள்ளதென்றும், அதன் அபிப்பிராயம் ஐரோப்பிய சமூகத்தின் பொது அபிப்பிராயமாகாதென்றும்கூறி, தன் இந்திய நண்பர்களை ஏமாற்றப் பார்க்கின்றது. கல்கத்தா 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகையோ தந்திரத்தில் குள்ள நரியையும் வென்று விடுகின்றது. சங்கத் தலைவர் அபிப்பிராயம் ஐரோப்பிய சங்கத்தின் பொது அபிப்பிராயமுமாகாது என்று 'ஸ்டேட்ஸ்மன்' வாதிக்கின்றது. ஐரோப்பிய சங்கத்தின் உறுப்பினருள் அமிதவாதியாக விளங்கும் ஒரு பகுதியினரின் அபிப்பிராயமாகவே மிஸ்டர் ஜேம்ஸின் பிரசங்கம் மதிக்கப்பட வேண்டுமாம். உடனேயே கமிஷன் நியமித்து விசாரணை செய்து, இப்பொழுது இந்தியா இருக்கும் நிலையில் ஏற்கெனவே ஒரு கையால் வழங்கப்பெற்றுள்ள சீர்திருத்தங்களையும் மறு கையால் பறித்துக் கொள்ளுதல் வேண்டுமென்று ஐரோப்பிய 'அமிதவாதி'யினர் விரும்புகின்றனராம். இத்தகைய பிற்போக்கு-நிலையிலுள்ள ஐரோப்பியர் கையில் 'இரட்டையாட்சி'யை ஏன் காட்டிக்கொடுக்க வேண்டும்? இந்தியர்கள்—ஐயோ, பாவம்!—ஏன் இவ்வளவு பித்தர்களாக இருக்க வேண்டும்? இவ்வாறு கூறி, 'ஸ்டேட்ஸ்மன்' கதையிலுள்ள முதலை போல் கண்ணீர் வடித்துக் கரைகின்றது.

இரட்டையாட்சி இருந்தாலென்ன? இறந்தாலென்ன? வாராது வந்ததோர் மாமணியாக இந்தியர் இரட்டையாட்சியை மதிக்கவில்லையே! தனனரசன்றோ, இந்தியா தவம் கிடந்து வேண்டுவது? ஆனால் 'ஸ்டேட்ஸ்மன்' போன்ற ஆங்கிலோ—இந்திய பத்திரிகைகளுக்கு இவையெல்லாம் எப்படி விளங்கும்? இரட்டையாட்சி போய்விடுமே—என்று ஏங்கிப் புலம்பும் 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகை, 'குடியரசினுக்கு இந்தியா தகுதி வாயந்ததன்று' என மிஸ்டர் ஜேம்ஸ் பாடும் பாட்டிற்கு இசையத் தாளம் போட்டுக்கொண்டு ஆனந்தக் கூத்தாடுவது ஆச்சரியமே.

திரு. லாங்போர்ட் ஜேம்ஸ் என்பார் உள்ளத்தில் தோன்றியவற்றை அப்படியே தந்திரமின்றி—சூதுவாதின்றி—வாயால் கக்கிவிடும் இயல்பு வாய்ந்தவர். பிரிட்டிஷ் ஏகாதிபத்திய இலாகா ஒன்று அமைக்க வேண்டுமென்றும், நடுத்தர ஆங்கில வகுப்பினரான இளைஞர்களுக்கு நல்ல பதவிகள் கிடைக்க வேண்டு மென்றும் மிஸ்டர் ஜேம்ஸ் கூறுகின்றார். இராணுவ விஷயத்தைப் பற்றி, தாம் அறியாமையில் ஆழ்ந்திருப்பதாகக் கூறிய ஐரோப்பிய சங்கத் தலைவர், பிரிட்டிஷ் விருந்து மேடைகளை இந்திய உத்தியோகஸ்தர்கள் தீண்டுவதால், வெள்ளை வீரர்களுக்கு விளையும் கௌரவக் குறைவை முன்னிட்டு, ஆங்கில வீரத்தாய்மார் உள்ளம் நாணத்தால் வருந்தும்!—என்று கவலைக்கடலுள் ஆழ்ந்து விடுகின்றார். இங்ஙனம் நாகரிக முறையில 'தீண்டாமை'க்குப் புத்துயிர் அளிக்க விரும்பும் துரைகளையும் துரைச்சியாரையும் சாந்தி செய்யாவிட்டால், 'போல்ஷ்விக்' பிரளயம் வந்து விடும்!—என்று வாசாலகரான மிஸ்டர் ஜேம்ஸ் பயமுறுத்தினர். ஆனால் இதனைக்கேட்டு விருந்தினர்கள் அஞ்சிச்சாரம் கொள்ள வில்லையாம்.

ஐரோப்பிய சங்கத்தலைவர் இவ்வளவு வெஞ்சினங் கொண்டதற்குக் காரணம் என்னை? 'காரணமின்றிக் காரியமில்லை' யென்பது உண்மையெனினும், கோபத்திற்குக் காரணம் இன்றியமையாததன்று. ஏற்கெனவே காரணமில்லாத போது, ஒரு காரணத்தைக் கற்பனைக் கண்ணால் கண்டு கொள்ளுதல் கூடும். மிஸ்டர் ஜேம்ஸ் தம் சீற்றத்திற்கு ஒரு காரணம் காட்டுகின்றார். இந்நாட்டிலுள்ள புதிய அரசியல் கட்சியினர், ஐரோப்பிய சமூகம் மூட்டை முடிச்சுகளோடு இந்தியாவைவிட்டு வெளியேற வேண்டுமென்று விரும்புகின்றனராம். இக்கட்சியினர்க்கு வாய்கொண்ட மட்டும் வசைமொழி யாசிகள் வழங்கிய பின்னரும், மிஸ்டர் ஜேம்ஸின் மனம் அமைதிபெறவில்லை. 'இதோ ஐரோப்பியன் இருக்கின்றான். வெளியே தள்ளப்பட்டாலொழிய, அவன் வெளியேறமாட்டான். இந்தியர்கள் அவனைத் தள்ள வேண்டுமென்று ஒரு சிறிதும் கருதார். ஏனெனில் (ஆரென்று அறியத்தகாத அநாகரிக நிலையிலிருந்த) இந்தியாவை உருவாக்கிய பெருமை ஐரோப்பியர்க்கன்றோ உரியதாகும்?'—என்று மிஸ்டர் ஜேம்ஸ் வீரவசனம் பேசுகின்றார். ஐரோப்பியரில்லாவிட்டால் இந்தியாவில் யுகப்பிரளயம்வந்து விடுமென்றும் பயமுறுத்துகிறார். இத்தகைய வீர வெஞ்சின—வெற்றுரைகளுக்கு விசேஷ சந்தர்ப்பம் ஒன்றும் ஏற்படாததால், ஐரோப்பிய சங்கத்தலைவர் கூத்து விகடக் கூத்தாகவே முடிந்ததென்பது எமது கருத்து.

சீர்திருத்தங்கள் ஒழிய வேண்டுமென்றும், அவற்றின் ஸ்தானத்தில் ஐரோப்பிய ஆதிக்கம் நீடூழி வாழும் வசதிகள் ஏற்பட வேண்டுமென்றும் மிஸ்டர் ஜேம்ஸ் கூறுகின்றார். அன்னிய ஆட்சியை நிலைபெறச் செய்யும் வகுப்பு வாதம—வகுப்புணர்வு—இந்தியாவிற்கு இன்றியமையாததென்றும், சட்டசபைகளைப் பொறுப்பு வாய்ந்தனவாக்குதற்கு அரசினர் தக்கஉறுப்பினர்களை நியமனம் செய்வதே முறையாகுமென்றும் கூறி, மிஸ்டர் ஜேம்ஸ் இன்னும் பல பிற்போக்கான ஆலோசனைகளையும் வெளியிட்டுள்ளார். 'பனங்காட்டு நரி சலசலப்புக்கு அஞ்சுமா? அஞ்சலாமா?' தேசிய வாதியர்கள் இத்தகைய வெஞ்சின உரைகளுக்கு அஞ்சாது, காந்தியடிகள் காட்டும் அறவழி நின்று உழைக்க முற்படுவாராக.

## 'குமரன்' மாதப்பதிப்பு.

இது தமிழ்ச் சுவை அறிவார்க்குத் தேனென இனிக்கும் ஓர் இனிய மாதப் பத்திரிகை. ஏனையோர்க்கும் விளங்குமாறு பல கட்டுரைகளும் நிகழ்ச்சிக் குறிப்புக்களும், விநோதப் பகுதிகளும் வெளிவருகின்றன. பொது ஜனங்கள் அனைவரும் சுலபமாக வாங்கிப் பயன் பெறுமாறு இதன் வருட சந்தா நாளிது ஐப்பசித்திங்கள் முதல் ரூ க—அ—0 ஆகக் குறைக்கப் பெற்றுள்ளது. தமிழ் மக்களனைவரும் ஆதரித்து, குமரனை என்றும் குமரனாகத் திகழுமாறு செய்வார்களாக!

காரியஸ்தர்,
'குமரன்' காரைக்குடி.

## இத்தாலியில் : : : இராவண ராஜ்யம்.

இவ்வாண்டு நோபல் பரிசு பெற்ற பேரறிஞர் பர்னாட்ஷா 'என்ஸைக்ளோபீடியா பிரிட்டானிகா'வின் புதிய பதிப்பில் சமூக அபேத வாதம் (Socialism) என்ற தலைப்பெயரோடு ஓர் அழகிய பொருள் பொதிந்தகட்டுரை வரைந்துள்ளார். அதன் ஓர் பகுதியில்எதேச்சாதிகாரத்தைப்பற்றி,பின் வரும் குறிப்பு காணப்படுகின்றது:—

முதலாளிமார் ஆதிக்கம் பலனற்றதென்றுகண்டும் வியாபாரநிலை வரவர வீழ்ச்சி பெறுவது கண்டும், அதிகத் தீர்வைபோடுவதும் சிதைந்துவரும் தொழில்களைப்பொதுஉடைமைஆக்குவதும் அல்லது கட்டாயமான ஓர் திட்டத்தின்படி மாற்றியமைப்பதும் எல்லா வகுப்பினரையும் கட்டாயப் படுத்தி இராணுவ இலாகாவிலும் பிற இலாகாக்களிலும் சமூகசேவை புரியசசெய்வதுமே உபாயமெனக் கண்டும்,இத்தகைய ஆலோசனைகளை வெளியிடுவதற்கு மக்கள் அஞ்சுகின்றார். தீர்வையை அதிகப்படுத்தினல் தங்கள் ஸ்தானம் போய்விடுமே என்பதுஇவர்கள் பயம். இப்போறுப்பினின்று தப்பித்துக் கொள்ளும் பொருட்டு இவர்கள் பார்லிமெண்டு முறைகளையே அடியோடழிக்கப் பார்க்கின்றார். இதற்காகவே எதேச்சாதிகார முறைகளைக் கைக்கொள்ளுகின்றார். இத்தகைய முறைகள் இத்தாலி, ஸ்பெயின், ருஷ்யா நாடுகளில் காணப்படுகின்றன. இந்த நூற்றண்டில் இங்ஙனம் பார்லிமெண்டு முறைகளை நம்பாது கைவிடுவது ஓர் அற்புதமேயாகும். எனினும் இன்னும் வாக்காளர் விழித்துக் கொள்ளவில்லை. நீண்டபோரின் பயனாக ஆளும்வலிமைபெற்றும், இதனை அனுபவிக்க இவர்களுக்கு அறிவுமில்லை, விருப்பமுமில்லை. நாகரிகம் குறைந்த தேசிய லட்சியங்களை உதைத்துத் தள்ளிக்கொண்டிருக்கும் காலத்தில் இம்மக்கள் தங்கள் அரசாங்கத்தைக்குறுகியநிலையிலேயே வைத்துக் கொண்டிருக்கத் தங்கள் வாக்குகளை உதவுகின்றார்.



பர்மா சிவில் ஸர்விசிலிருந்து உபகாரச் சம்பளம் பெற்று இங்கிலாந்தில் வசிப்பவரும் பொதுவாக உலகமுற்போக்கிலும் சிறப்பாக இந்தியாவின் முற்போக்கிலும் பெருங்கவலைகொண்டுள்ளவருமான பர்னர்ட் ஹாட்டன் என்பாரும் இத்தாலி ஆட்சி முறையை கண்டித்துள்ளார். பொது மக்கள் உரிமையின் அறவே உதறி எறிந்த நாடு இத்தாலி என்றும், மிருகபலமே மக்களுக்குள் மத்தியஸ்தம் செய்வதென்ற கொள்கையினையுடையநாடும் இத்தாலிதான் என்றும் பர்னர்ட் ஹாட்டன் கூறுகின்றார். நடுநிலை நின்று உண்மைகாணும் பெரியோர்களான பர்னர்ட்,ஹாட்டனும் பர்னர்ட் ஷாவும் இத்தாலியைக் குறித்து வெளியிட்டுள்ள அபிப்பிராயங்களை வாசகர்கள் நன்கு சிந்தித்தல் வேண்டும்.—முஸ்ஸோலினி ஒரு மகா மேதாவி என்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை. இராவணேச்வரனும் மகா மேதாவி தான். "ஐயன் வேதம் ஆயிரம் வல்லோன் அறிவாளன்" என்று இராமாயணம் இராவணனை வருணிக்கின்றது. பாஸிஸ்டு அரசாங்கம் பெருந்திறமை வாய்ந்ததோர் அரசாங்கம் என்பதிலும் ஐயமில்லை. எனினும் அவ் ஆட்சி பயங்கரமான இராவண ராஜ்யமாகவேயிருக்கின்றது. இத்தாலியின் 'ஸோஷலிஸ்ட்' கட்சித்தலைவர் ஸீனியர் துரேதி என்பார் "இன்று இத்தாலியில் நடைபெறும் ஆட்சிமுறை மிக மிகக்கொடியதெ"ன்றும், "அநேக அரசியல் வாதிகள் மறைந்து விட்டார்களென்றும், அவர்கள் இப்போது எங்கே இருக்கிறார்களென்று ஒருவருக்கும் தெரியாதெ"ன்றும் அதி சமீபத்தில் கூறியதாக, ஒரு தந்திச்செய்தி கூறுகின்றது. இதனல் செயல்—திறன் வேறு; நீதித்திறன்வேறு—என்பது இனிது விளங்கும்.

## எண்டிசைக் காட்சி.

### அரசப்பிரதிநிதியும் — — — — ஐரோப்பிய சங்கமும்.

வைசிராய் தமக்கு விருந்தளித்த ஐரோப்பிய சங்கத்தினர்க்குத் தம் மகிழ்ச்சியுரை வழங்குகையில், சங்கத் தலைவர் திரு. லாங்போர்ட் ஜேம்ஸின் அறிவாற்றல்களையும் ஒழுக்கவன்மையினையும் வாயாரப்புகழ்ந்து பேசினர். சீர்திருத்தங்களைப் பற்றி "பாலுக்கும் காவல், பூனைக்கும் தோழன்" என்ற நிலையில் வழ வழ என்று பேசிவிட்டு, பிரிட்டிஷ் பார்லிமெண்டார் இந்தியா விஷயத்தில் நல்விருப்பமுள்ளவரேயாவர் என்று அரசப்பிரதிநிதியார் சித்தாந்தம்செய்கிறார். நரகத்திலும் நல்விருப்பங்களுண்டு—என்று ஆங்கிலேயர் கூறுவதுண்டு. ஆனல் நல்விருப்பங்கள் செயலில் வாராததால், நரகலோகவாசிகள் அவ்வுலகத்தினை அடைந்துள்ளார்! அவ்வண்ணமே, செயலில் வாராத நல்விருப்பங்கள் பிரிட்டிஷ் பார்லிமெண்டிலும் காணப்படுதல் கூடுமென்பதை நாமும் ஒப்புக்கொள்ளுகிறோம். இத்தகைய மலடுகளான 'நல்விருப்பம்' வாய்ந்த பார்லிமெண்ட் என்றுதான் இந்தியாவிற்கு இரங்கி அருள் பொழியும் என்பதைக் குறித்து ஒருவராலும் ஜோஸ்யம் சொல்லமுடியாதென்று வைசிராய் சொல்லுகிறார். வைசிராய் நமது நாட்டு 'மாருதி' ஆரூடக்காரர்களையும் 'குட்டிச்சாத்தான்' உபாசகர்களையும் 'திரிகாலஞானி'களையும் காந்தி ஜோஸ்யர்களையும் கலந்து ஆலோசனை செய்திருக்கவேண்டும். ஆனல் ஒன்று மறியாத—ஒரு பாவமும் பழியும் அறியாத—கிரகங்களைத் தொந்தவு செய்யாமலே 'பிரிட்டிஷ்காரர் மனமுவந்து ஒருநாளும் இந்தியாவிற்குத்தன்னரசு' வழங்கப் போவதில்லை யென்று துணிந்து கூறிவிடலாம்.

### அவமானம் யாருக்கு?

திருவாளர், தண்டபாணிப்பிள்ளை அபிப்பிராயபேதத்தை முன்னிட்டு, தமிழர் மகாநாட்டில் கேவலமாக நடத்தப்பட்டாரென்பது குறித்து, தேசபக்த நன்மக்கள் அனைவரும் பெரிதும் வருந்துகின்றார். பிள்ளையவர்களுக்கு இதனல் அவமானம் ஒன்றுமில்லை. அவமானம், அபிப்பிராயத்தை பொறுக்க முடியாத சுயராஜ்யக்கட்சியினரையே சார்ந்ததாகும். மகாநாட்டின் தலைவர் திரு. கே. வி. ரங்கசாமி ஐயங்கார் இவ்விஷயமாக எழுதியிருப்பதும், சுயராஜ்யக் கட்சியினரை அவர்கள் இழைத்த பிழையினின்று முற்றும் விடுதலை செய்யவில்லை. எனவே திரு தண்டபாணிப்பிள்ளையவர்கள் விஷயத்தில் 'தலைவர்கள்' கொண்டிருந்த மனப்பான்மையினை அழுத்தமாகக் கண்டிப்பதோடு, இது நமது மாகாணத்தில் இன்று வகுப்புணர்வினை வென்று வாகைசூடிய கட்சியின்மீது பதிந்துள்ளதோர் கறையாகு மென்றும் குறிப்பிடவிரும்புகிறோம்.

### அரசியல் கைதிகள்.

வங்க நாட்டில் அவசரச் சட்டத்தின் கீழ், சிறை செய்யப்பெற்றிருக்கும் பலதேசபக்தர்களும் பல நோய்களால் வருந்துவதாக 'பார்வர்டு' பத்திரிகை விவரக்குறிப்புகளோடு தெரிவிக்கின்றது. விசாரணையின்றி, சிறைபுகுந்த இவர்களுக்கு இந்நோய்கள் முன்னரே இருந்தனவா? இருந்தால் இத்தகைய நோயாளிகளை அநாகரிக முறையில் தொந்தவு செய்வது நீதியா? அறமா? சிறையிலேயே இந்நோய்கள் தோன்றியிருந்தால், அரசினர் எவ்வளவு பொறுப்பாக நிரபராதிகளான உயர்தர அரசியல் கைதிகள் விஷயத்தில் நடந்துகொண்டிருக்கிறார்கள் என்பது தெளிவாகின்றது. அரசியல் கைதிகளை நடத்தும் முறை ஓர் அரசாங்க நீதி பரிபாலனத் திறமைக்கு ஓர் அளவு கருவியாகும். இத்தாலி நாட்டில் அரசியல் கைதிகள் நன்றாக நடத்தப்படவில்லையென்று கேள்விபுற்றதும், அந்நாளில் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய முதல் மந்திரியாயிருந்த க்ளாட்ஸ்டன் பிரபு நேரில் சென்று பார்வையிட்டனரன்றோ? பிறர் செய்தால் மாத்திரம் குற்றம்; தாங்கள் செய்தால் குற்றமாகுமா? சிறு செயல்களும் 'பெரிய' மனிதர்—பெரசர்—பெரிய அதிகார வர்க்கத்தினர் செய்யும் போது பெருஞ் செயலாகி விடுமென்று கருதுவது ஏகாதிபத்திய மனப்பான்மை போலும்!

### அந்தமான் குடியேற்றம்:—

அந்தமான் குடியேற்ற விஷயமாக இந்திய அரசாங்கம் நடந்துகொள்ளும் முறையும் நாகரிக நன் முறையாகக் காணப்படவில்லை. அந்தமான் தீவுகள் பூலோகவைகுண்டமென்று அரசினர் கருதுவாரெனின், விருப்ப மில்லாத மாப்பிள்ளை மார்களைக் கட்டாயப்படுத்துவதற்குக் காரணமென்னே? சீமையில் வேலையிலாத் திண்டாட்டத்தால் வருந்துவோரை இந்த பூலோக—பரலோகத்திற்கு அனுப்பிவிடலாமே! மாப்பிள்ளைமார்களின் பிரதிநிதிகளாகச் சென்றோர், குடியேற்றத்திற்கு அந்தமான் தீவுகள் தக்கனவல்ல என்று கூறியுள்ளார். எனினும் அரசினர் பிடிவாதமாகத் தாம் கொண்டகருத்தை நிறைவேற்ற முயல்கின்றார். அந்தமானிலுள்ள மாப்பிள்ளைக் கைதிகளின் கூட்டம் ஒன்றினை போலீஸ் பந்தோபஸ்தோடு அழைத்துவந்து, மலையாளத்திலுள்ள—யாதொரு குற்றமும் அறியாத— மாப்பிள்ளை ஸ்திரீகளையும் குழந்தைகளையும் அந்தமான் செல்லுமாறு, குறித்த கைதிகளைக்கொண்டு தூண்டச்செய்வது எவ்வளவு அநாகரியமான செயலாகும்?

## வியாபாரப் பகுதி.

### சைகோன், மார்கழிமீ கூஉ

| | |
|---|---|
| உண்டியல் விலை | நூற்று முப்பத்தாறு. |
| சிங்கப்பூர் வட்டம் | பதினேழ்ரு. |

### பினங்கு, மார்கழிமீ கூஉ

| | |
|---|---|
| சென்னை உண்டியல் விலை | நூற்று ஐம்பத்தைந்து. |
| ஈயம் விலை | நூற்று ஐம்பத்தைந்து. |
| ரப்பர் விலை | எண்பத்தைந்து. |

### இரங்கூன் மார்கழிமீ எஉ

| | |
|---|---|
| நடப்பு வட்டி | 0-௧0-௬ |
| தவணை வட்டி | 0-௧0-0 |
| பவுன் | ௧௯-௧0-௬ |
| பட்டு நெல் | ௧அ௭-அ-0 |
| ரயில் நெல் | ௧அரு |
| மீடோன் | ௬00 |
| ஸ்பெஷல் | ௪௬0 |
| சிறிய மில் | ௬00 |
| பெரிய மில் | ௪அ0 |
| மில்சேர் | ௫௧0—௬௬ரு |
| நசேன் | ௪௧ரு |
| ஏ. ஒன் குருணை | ௪௧0 |
| பி. ,, டி | ௪௪0 |
| வி ,, டி | ௪௪0 |
| காராமணி | உஅரு—ரு00 |
| சோனம் | ரு00 |
| மிம்பு காசக்கட்டி | ௧0ரு-௧-0 |

தானியம் விலை நிதானம்.
பணம் சொக்கி.

## கப்பற்செய்தி.

"எதியோப்பியா"க் கப்பல் சென்ற திங்களன்று இரங்கூனிலிருந்து சென்னை வந்து சேர்ந்தது. நாளை வெள்ளிக்கிழமை இரங்கூனுக்குத் திரும்பும்.

"டைரியா"க் கப்பல் மலாய் நாட்டிலிருந்து நேற்று புதன்கிழமை சென்னை வந்து சேர்ந்திருக்கும். நாளை வெள்ளிக்கிழமை அங்கிருந்து புறப்பட்டு நாகப்பட்டணம் வந்து நாளிது மார்கழி மாதம் ௧௨-ம் நாள் ஞாயிறன்று மலாய் நாட்டிற்குத் திரும்பும்.

"டேஸ்டா"க் கப்பல் மலாய் நாட்டிலிருந்து நாளைய சனிக்கிழமை (மார்கழிமீ ௧0உ) சென்னை வந்துசேருகிறது. அங்கிருந்து ௧௨உ நாகப்பட்டணத்திற்குப் புறப்பட்டு, ௧௨உ ஞாயிற்றுக்கிழமை மலாய் நாட்டிற்குத் திரும்புகிறது.

"டைரியா"க் கப்பல் மார்கழி மாதம் உ௧உ மலாய்நாட்டிலிருந்து சென்னை வந்து அங்கிருந்து உ௧உ நாகப்பட்டணத்திற்குப் புறப்பட்டு உ௯உ ஞாயிற்றுக்கிழமை நாகபட்டணத்திலிருந்து மலாய் நாட்டிற்கு திரும்பும்.

## உள்ளூர்ச் செய்தி.

(நமது நிருபரிடமிருந்து.)

| | |
|---|---|
| மதராஸ் உண்டியல் வட்டம் | 0—௯—0 |
| ரெங்கூன் உண்டியல் வட்டம் | ௧—0—0 |
| பவுன் (பொற்காசு) | ௧௯—௧—0 |
| வெள்ளி ௧00 ரூ. எடை | ௬௧—0—0 |

**ஸ்வாமி புறப்பாடு:**— நளிது மார்கழி மாதம் ௧உ-ம் நாள் திங்கட்கிழமை கிருஷ்ண பட்ச அஷ்டமித் திதி யாலையில் இவ்வூர் நகரச் சிவன் கோவில் பஞ்சமூர்த்திகள் எழுந்தருளச் செய்யப்படும். அந்த தினம் காலையிலும் மாலையிலும் திருவிடைமருதூர் வீருசாமியின் நாதசுரவாத்தியம் நடைபெறும்.

**விவேகானந்தர் பிறந்த தினம்:**—ஸ்ரீ விவேகானந்தர் பிறந்தினக் கொண்டாட்டம் இவ்வூர் இந்துமதாபிமான சங்கத்தில் நடைபெற்றது. மாலை ஆறுமணி சுமாருக்கு சங்கக் கட்டிடத்தில் "சுகோதயம்" ஆசிரியர் திருவாளர். வி. என். அரங்கஸ்வாமி அய்யங்காரவர்களது தலைமையில் திரு. பி. ஸ்ரீ ஆச்சாரியார், விவேகானந்தரது வாழ்க்கையும் உபதேசமும் என்பது பற்றியும், திரு. ஆர். ஸ்ரீனிவாஸாச்சாரியார், பக்தி என்பது பற்றியும், திரு. அரு. சோமசுந்தரன் சங்கங்கள் செய்யவேண்டிய வேலை என்பது பற்றியும் சொற்பெருக்காற்றினார்கள். தலைவர் முடிவுரைக்குப் பின் வந்தனோபசாரத்துடன் கூட்டம் கலைந்தது.

**யூனியன் போர்டு:**— இவ்வூர் யூனியன் போர்டு சபையின் கூட்டமொன்று சென்ற வெள்ளிக்கிழமை திருவாளர் முரு. வீர. சாமிநாதன் செட்டியாரவர்களது அவைத் தலைமையில் நடைபெற்றது. பல முக்கியமான விஷயங்கள் முடிவுசெய்யப்பட்டன. ௧௯உஎ-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் முதல் வாரத்தில் சுகாதார வாரக் கொண்டாட்டம் நடத்துவதென்றும், அதற்கு ... மதிப்பதென்றும், ஓர் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அதற்கென வேண்டிய ஏற்பாடுகள் செய்யும் பொருட்டு திருவாளர்களான என். எம். வெங்கட்டராமய்யர், மு. ராம. பெரியண்ணன் செட்டியார், வெ. மெ. ராம. சுப்பிரமணியன் செட்டியார் ஆகியவர்களடங்கிய ஓர் சப் கமிட்டி நியமிக்கப்பட்டது.

**மகேசுவர பூசை:**— இவ்வூர் முத்துப்பட்டணம் ஸ்ரீ மீனம்பிகா பக்தடியார்களின் சார்பில் சிற்சில அன்பர்களின் பொருளுதவி கொண்டும், உற்சாகத்தைக்கொண்டும், நாளிது மார்கழிமீ ௧உ ஞாயிறு திருக்கார்த்திகை நட்சத்திரமும் கூடியபடியால், அன்று காலை ௧-மணிக்கு பக்தடியார்களின் திடலில் பஞ்சமகள் முதலான பல திறமக்களுக்குமாக சுமார் ௬000-க்கு இனந்தவர்க்கு "மகேசுவர பூஜை" செய்து அன்னமிட்டார்கள். அதில் பிராமணர்கள் ... போர்களுக்கும் போஜனம் நடத்திவைத்தார்கள். அன்பர்களின் அரியபணி போற்றத்தக்கதே. எளிய மக்கள் எல்லோரும் ... பெருமானை வேண்டி அடுத்த வருடமும் இவ்வாறு அன்னம் கிடைக்க வேண்டுமென்று பன்முறை வாயார வாழ்த்திக்கொண்டே இல்லத்திற்கேகினர்.

**பொதுக்கூட்டம்:**— அன்று மாலை ௬-மணிக்கு "திருவாசக கழக"ச்சார்பில் ஸ்ரீ மீனாட்சியம்மன் கோவில் மண்டபத்தில், விக்னேஸ்வர பூஜை செய்து ஸ்ரீமான் பெரி. நா. ரா. அண்ணாமலை செட்டியாரவர்கள், தலைமை வகித்து கோட்டூர் தசாவதானம் ஆறுமுகம்பிள்ளை யவர்கள், "கழகத்திற்கும், பக்தடியார்களுக்கும்" வாழ்த்துப் பஞ்சகம் என்ற கவிபுனைந்து அதை சபையோருக்கு அறிவிக்க விரிவுரையுடன் கூறி அவைத் தலைவரால், சபையின்மீது இயற்றப்பெற்ற அரிய பாடலையும் ஓதி ஆற்றல் மிக்க பிரசங்கமாரியும் பொழிந்தனர். அதன்பிறகு அன்பர் ஆதி. லெ. அருணாசலம் செட்டியாரவர்களால், "வாலிபர்களின் முன்னேற்றம்" என்றும் ஆர்வமிக்க சொற்பொழிவு நிகழ்த்தப்பட்டது. பின்னர் சபைக்குவந்தனம்கூறி ... பாதிகள் வழங்க சபை இனிதாக முடிந்தது, எனக் காரியதரிசி அறிவிக்கிறார்.

# செய்தித்திரட்டு.

**எறும்பின் சக்தி.**

தன்னைக்காட்டிலும் ௫,000 மடங்கு கனமான ஒரு பொருளைத் தாடையில் கௌவிக்கொண்டு எறும்பு நடக்குமாம்.

**புதிய புகைப்படக் கருவி.**

ஒரு விநாடியில் ௩00 புகைப்படங்கள் எடுக்கக்கூடிய புதியகருவியொன்றை எம். நோகே எனும் பிரஞ்சுக்காரர் கண்டுபிடித்திருக்கிறாராம்.

**சிறைமாற்றம்.**

ஆள் தூக்கிச் சட்டப்படி கைது செய்யப்பட்டு மாண்டலே சிறையில் வைக்கப்பட்டிருந்த ஸ்ரீமான் சுபாஷ் சந்திரபோஸ் வைத்திய வசதியை முன்னிட்டு இரங்கூன் சிறைக்கு மாற்றப்பட்டிருக்கிறார்.

**அவசரச் சட்டத்திற்குப் புதிய பலி.**

வங்காள அவசரச் சட்டப்படி, சிட்டகாங் கல்லூரியில் பீ. ஏ. வகுப்பில் படித்துவந்த அகிலசந்திர குஹா எனும் மாணவர் நாளிது டிஸம்பர் மாதம் ௧௨-ம் நாள் கைது செய்யப்பட்டார்.

**விவிலிய நூல் பிரசாரம்.**

அமெரிக்காவிலுள்ள விவிலிய நூல் சங்கத்தார் அந்நாட்டிலுள்ள விடுதிகளில் ஒவ்வொரு அறையிலும் தினந்தோறும் விவிலியநூல் பிரதியொன்றை வைப்பதற்கு ஏற்பாடு செய்துவருகின்றனராம்.

**நன்கொடை.**

கல்கத்தாவிலுள்ள மீமன்சிங் ஆஸ்பத்திரியில் இன்னுஞ் சில வசதிகள் செய்யும் பொருட்டு திரு ஹேமேந்திர நாத்ராய் சௌத்ரி ரூ. ௨0 ஆயிரமும், கோவிந்தசந்திர கோஷ் ரூ. ௧௫ ஆயிரமும் நன்கொடை அளித்துள்ளார்களாம்.

**புதுமாதிரி தபால் முத்திரைகள்.**

பலகள்ள தபால் முத்திரைகள் உலவுவதை முன்னிட்டு போர்த்துகேசிய அரசாங்கத்தார் புதியமாதிரியான முத்திரைகள் அச்சிடத் தீர்மானித்திருக்கின்றனரென்றும் ஏது சிற்பிகள் மாதிரிவகைகள் வரைந்தனுப்பி யிருக்கின்றனரென்றும் சொல்லப்படுகிறது.

**கைதிதப்பியோடினன்.**

சில தினங்கள் முன் பர்மாவில் ஓர் கைதி காவற் சேவகன் வைத்திருந்த ஆயுதத்தைப் பிடுங்கிக்கொண்டு அவனைக் காயப்படுத்திவிட்டு ஓடி விட்டானாம். முன்னமொருமுறை இவன் ஓர் தலைமைச்சேவகனையும் சப் இன்ஸ்பெக்டரையும் குத்திக் கொன்றிருக்கிறானாம்.

**விசித்திர மரம்.**

ஆப்பிரிக்காவின் மேற்குக் கடற்கரையோரமுள்ள ஒரு காட்டில் ஓர் வகையான விசித்ரமான மரங்கள் இருக்கின்றனவாம். அவைகள் ஒரு அடி உயரத்திற்கு மேல் வளருவதில்லையாம். ஆனால் மரத்தின் குறுக்களவு நாலு அடியாம். எம் மரத்திலும் இரண்டு இலைகளுக்குமேல் இருப்பதில்லையாம். அவற்றின் நீளம் ௬ அடியாம்.

**தீவிபத்து.**

சென்ற வியாழக்கிழமையன்று சென்னை சிந்தாதிரிப் பேட்டையைச் சேர்ந்த சுமார் மூன்றுவயதுள்ள ஆண் குழந்தையொன்று அருகிலிருந்த மண்ணெண்ணெய் விளக்கை கீழே தள்ள உடையில் தீப்பற்றியதும் குழந்தை அழ, சாதாரணமாகக் குழந்தை அழுகிறதென்று எண்ணி வீட்டிலுள்ளோர் சும்மாவிருந்தனரென்றும், குழந்தை தீக்கிரையாயதென்றும் கூறப்படுகிறது.

**நஷ்ட ஈடு.**

பங்களூரில் பொது ரஸ்தாவில் சைகிளில் ௨௫-வயதுள்ள வாலிபனொருவன் சிறிது காலம்முன்னர் செல்லுகையில் ஓர் பெரும் பள்ளத்தில் வழுக்கி விழுந்து பற்கள் உடைந்து மூக்கிலும் பிறவிடங்களிலும் பலத்தகாயமடைந்தான். இதனால்தனது அழகுகுலைந்துமன்றிவேதனையால்படிப்பும் போனதாக மைசூர் அரசாங்கத் தலைமைக் காரியதரிசி மீதும், பங்களூர் நகரசபை மீதும் ௧0-ஆயிரம் ரூபா நஷ்ட ஈடும் வட்டித்தொகையும் கொடுக்க வேண்டுமென அவ்வாலிபன் வழக்குத்தொடுத்திருக்கிறான். பிரஸ்தாப ரஸ்தாவில் பள்ளம் வெட்டியிருந்த இடத்தில் அதிகாரிகள் எச்சரிக்கைப் பலகைபோடாமல் அசிரத்தையாக விருந்ததாகக் கூறுகிறான்.

**தண்ணீர் வரிக்குறைவு.**

காலனுக்கு ஒரு ரூபாயாக விருந்த தண்ணீர் வரியை பம்பாய் நகரசபையார் பன்னிரண்டு அணாவாகக் குறைத்துவிட்டனர்.

**நீதிபதி வீட்டில் களவு.**

சில தினங்கள் முன் திருச்சி சப் ஜட்ஜ் வீட்டில் கள்வர்கள் நுழைந்து ரூ. ௬000 பெறுமானமுள்ள சாமான்களைக் களவாடிச் சென்றார்களாம்.

**கோயிலில் கொலை.**

அலிப்பூரைச் சார்ந்த கோரியர் ஹாட் எனுமிடத்திலுள்ள சிவன் கோயிலில் அக்கோயில் குருக்கள் சில தினங்கள் முன் கொல்லப்பட்டுக் கிடந்தார்.

**மகாத்மாவிற்கு உபசாரம்.**

நாளிது டிஸம்பர் மாதம் ௨௪-ம் நாள் மகாத்மாகாந்தியவர்கள் நாகபுரிக்கு விஜயம் செய்தபொழுது அவ்வூர் நகரபரிபாலன சபையார் அவருக்கு உபசாரப்பத்திரமொன்று வழங்கினர்.

**அமெரிக்காவில் செல்வர்.**

வருஷம் ஒன்றுக்கு ௩௦ லட்சம் டாலருக்கு மேல் சம்பாதிப்பவர் ௭௪ பேரும், பத்துலட்சம் டாலருக்கு மேல் சொத்துடையவர்கள் ௧௧-ஆயிரம் பேரும் தற்பொழுது அமெரிக்காவில் இருக்கின்றனராம்.

**அபாய அறிவிப்பு ஸ்தம்பம்.**

ஆகாய விமானங்களுக்கு அறிவிப்பாக எட்னா மலைச்சிகரத்தில் லட்சங்கோடி மெழுகுவர்த்திகள் வெளிச்சங்கொண்ட தீபஸ்தம்பமொன்று நாட்ட ரோம்நாட்டு எஞ்சினீயர்கள் கருதியுள்ளார்களாம்.

**சட்டசபைத் தலைவர்.**

சென்னைச் சட்டசபைத் தலைவராக திருவாளர் வி. வி. எஸ். நரசிம்மராஜு அவர்கள் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். உபதலைவர் தேர்தல் ஜனவரிமாதக் கூட்டத்திற்கு ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது.

**ரிக்‌ஷாக் கூலிகள்.**

சமீபத்தில் கல்கத்தாவில் நடந்த களவுகளிலும் மோசடிச் செயல்களிலும் சம்பந்தப்பட்டிருப்பதாகவும், அனுமதிச் சீட்டின்றி ரிக்‌ஷா இழுப்பதாகவும் குற்றஞ் சாட்டப்பட்டு ௨0௫ ரிக்‌ஷாக் கூலிகள் கைது செய்யப்பட்டிருக்கின்றனராம்.

**பெரிய ரயில்ஸ்டேஷன்.**

எடின்பரோ நகரிலுள்ள வேவர்லி ரயில் ஸ்டேஷன் ஸ்காட்லாந்திலுள்ள ஸ்டேஷன்களுள் மிகப் பெரியது. ௨0 ஏக்கர் விஸ்தீரண முள்ளது என்றும் தினம் ௧000 வண்டித் தொடர்கள் வந்து போகின்றனவென்றும் அதிலுள்ள பெரிய பிளாட்பாரம் ஒரு மைல் நீளமுள்ளதென்றும் சொல்லப்படுகிறது.

**விசித்திர மாணிக்கம்.**

வங்காளத்தைச்சேர்ந்த தனிகரொருவரிடம் விசித்திரமான மாணிக்கக் கல்லொன்று இருக்கிறதென்றும் அதில் அரையில் வெண்பட்டாடையும் தலையில் தலைப்பாகையு மணிந்துள்ள மனிதஉருவம் ஒன்று காணப்படுகிறதென்றும், அக்கல் பர்மாவில் கண்டெடுக்கப்பட்டதென்றும், சொல்லப்படுகிறது.

**இந்து தேவஸ்தானச்சட்டம்.**

இந்துதேவஸ்தானச்சட்டத்தை ரத்துச் செய்யுமாறு வேண்டிக்கொள்ளும் பொருட்டு சென்னையிலிருந்து ஒரு பிரதிநிதிக் கூட்டத்தார் கல்கத்தா சென்று இராஜப்பிரதிநிதியினிடம் ௧௫-மணிநேரம் பேசிக்கொண்டிருந்ததாகவும், அதைப் பற்றித்தான் கவனிப்பதாக இராஜப்பிரதிநிதி கூறியதாகவும் செய்தியெட்டுகிறது.

# கடிதங்கள்.

## சித்தாட்டுவயல்.

**திருத்தம்:**—சென்றவாரக் குமரனில் இப்பெயரோடு வந்த கடிதத்தில்; 'இக்கிராமத்தைக் காரைக்குடி திரு. சா. லெ. செட்டியப்ப செட்டியாரவர்களும் அரியக்குடி திரு. வெ. ராம. ரா. ராமஸாமி செட்டியாரவர்களும் கிரயத்திற்கு வாங்கியிருப்பதோடு' என்று காணப்படுகிறது. சித்தாட்டுவயல் கிராமத்தைத் திரு. செட்டியப்ப செட்டியாரவர்களே தன் சொந்தத்திற்கு வாங்கியுள்ளார்கள். அதில் வேறு எவருக்கும் பங்கில்லை, என ஒரு அன்பர் அறிவிக்கிறார்.

## திருச்சினாப்பள்ளி.

**மலைக்கோவில்:**-அக்ஷய வரு மார்கழிமீ ௩-௨ திருச்சிராப்பள்ளி ஸ்ரீ மலைக்கோவில் தர்மகர்த்தர் திரு. அரு. சு. வே. காசி விஸ்வநாதன் செட்டியார் அவர்கள் குமாரன் சிரஞ்சீவி பெத்தாச்சியின் மூன்றாவது ஜென்ம நட்சத்திரத்தை முன்னிட்டு ஸ்ரீ சுகந்த குந்தளாம்பா சமேத ஸ்ரீ மாதுர் பூதேஸ்வர ஸ்வாமிக்கும், உச்சி மலைப் பிள்ளையாருக்கும் ஏகாதச நியாச ஜெபஞ் செய்து ஏராளமான அபிஷேகமும் சகஸ்ர நாம அர்ச்சனைகளும் விமரிசையாய் நடைபெற்றதுடன் ஏழை ஜனங்களுக்கு அன்னமும் வஸ்திரம் வகையராவும் வழங்கப் பெற்றது, என ஒரு நிருபர் எழுதுகிறார்.

## குன்றக்குடி.

**தீவிபத்து:**—இவ்வூரில் நாளிது மார்கழி ௩-௨ இரவு சுமார் ௧௧-மணிக்கு மேற்குவீதியிலுள்ள திருப்பத்தூர். ராம. ந. நாகப்பபிள்ளை வீடுதியின் மேல்மாடித் தளத்தில் போடப்பெற்றிருந்த தென்னைக் கீத்துக்கொட்டகையும் முன் வாரத்தில் இறக்கியிருந்த, கீத்துக்கொட்டகையும் சில சன்னல் கதவுகளும் அதற்கடுத்தாப்போலிருந்த கொல்லுப்பட்டரை, காளியாசாரி வீட்டிற்குளிருந்த சாக்குப்படுதாவில் தீப்பிடித்து, மேற்படி ஆசாரியாரின், பனை ஓலை வீட்டிற் பிடிக்க, எல்லாம் ஒன்றுசேர அக்கினி தேவனுக்கிரையாயின. செட்டிக் கட்டிடத்திற்கொன்றும் சேதமில்லை. கொல்லுப்பட்டரைக் கூடத்தையும் நிரப்பிவிட்டனர். ஜனச்சேதமில்லை, என அம்பிகைபாலன் அறிவிக்கிறார்

**அவதூறு வழக்கு.**

"ஸ்டேட்ஸ்மன்" பத்திரிகைமீது திரு. சுபாஷ் சந்திரபோஸ் அவர்கள் கொண்டுவந்திருந்த அவதூறு வழக்கில் ஜஸ்டிஸ் பக்லண்டு அப்பத்திரிகை எழுதியது வரம்பிற்குட்பட்டு அபிப்பிராயம் கூறியதாகவே ஆகிறதென்றும் விசேஷ உரிமையென்ற பிரஸ்தாபத்திற்கே இடமில்லையென்றும் கூறி வழக்கைத் தள்ளிவிட்டார்.

**தேசபக்தர் காலஞ் சென்றார்.**

௧௯0௬-ம்ஆண்டுமுதல்தேசியத்துறையில் ஈடுபட்டுஉழைத்துவந்தவரும், பாரதியாரது கீதங்களைப்பாடுவதில்சிறந்தவரும், பிரபல வக்கீலுமான ஸ்ரீமான் எஸ். டி. கிருஷ்ணய்யங்காரவர்கள் சென்ற வைகுண்ட ஏகாதசியன்று இரவு தூத்துக்குடியில் அரங்க மேடையில் பாரதியாரின் விடுதலைக் கீதங்களைப்பாடிக்கொண்டிருக்கையில்மாரடைப்பால் ஆண்டவனடி சேர்ந்தார். அவரது மரணம் தமிழ் நாட்டிற்கு ஓர் நஷ்டமாகும்.

**தீ விபத்து.**

கீழ் வங்காளத்திலுள்ள லோக ஜங்மார்க்கட்டில் சில தினங்கள்முன் பெருந் தீ விபத்தொன்று ஏற்பட்டு ரூ ௩-லட்சம் வரை நஷ்டமேற்பட்டிருக்கிறது. சுமார் ௧00 கடைகளும் ௫0 வீடுகளும் தீக்கிரையாயின.

## இயற்கை விநோதங்கள்.

**ஒரு பனைக்கு நூறு கிளை:**—ஆழ்வாராதிகளால் பாசுரங்களியற்றப் பெற்ற விஷ்ணு ஸ்தலங்களில் முக்கியமான ஸ்ரீமுஷ்ணத்திலிருந்து, அடியாராதிகளால் பதிகங்கள் ஓதப்பெற்ற சிவஸ்தலங்களிலொன்றான, திருக்கூடலையாற்றூர் செல்லும் வழியில் தருமநல்லூர் என்னும் சிறு கிராமமிருக்கிறது. அவ்வூர்க் கண்மாய்க்கரை இடபாகத்தில், பனைமரங்கள் கூட்டம் கூட்டமாயிருக்கின்றன. அதில் இரண்டு மூன்று பனைகளில், ஒவ்வொரு, பனைக்கும் நூறு கிளைகளுக்குமேலிருக்கின்றன. சரியாக எண்ணுவதற்கு நேரம் போதாததால், கூடலையாற்றூர் போய் சுவாமி தெரிசனஞ் செய்து திரும்பினோம்.

**ஒரு தென்னைக்கு நான்கு கிளை:**—அறந்தாங்கியிலிருந்து, நாகப்பட்டணத்திற்குப் புகைவண்டி செல்லும் வழியில், முத்துப்பேட்டைக்கு அடுத்தாப்போல் தம்பிக்கோட்டையில், ஒரு தென்னையில் உள்ள நான்கு கிளைகளும் காய்த்திருக்கின்றன, பிரயாணிகளுக்கு இவ்விஷயம் நன்றாகத் தெரியும்.

**ஒரு ஈஞ்சிக்கு மூன்று கிளை:**—காரைக்குடியை யடுத்த சழனிவாசல் கிராமத்தில் செல்லஞ்செட்டி ஊருணிக்கு வடபுறம், கோன்றிக் கண்மாய் மறுகாலுக்குக் கீழ்புறம், ஒரு ஈச்சமரத்தில், மூன்று கிளைகளிருக்கின்றன. நன்றாய் காய்க்கிறது, என ஜலமணோகரன் எழுதுகிறார்.

## இரங்கூன்.

தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கம்:—நிகழும் அட்சய ஆண்டு கார்த்திகைத் திங்கள் இருபத்து எழாம் நாள் ஞாயிற்றுக்கிழமை மாலை நான்கு மணிக்கு திருவாளர். பெரி. இலக்குமணச் செட்டியாரவர்களின் தலைமையில் ஓர் கூட்டம் கூட்டப்பெற்றது. அது காலை திருவாளர் மு. சொக்கலிங்கச் செட்டியாரவர்களால் "தனவணிக வாலிபர் மகாநாடு" ஒன்று இவ்வருடத் தைப்பூசத்தில் கூட்டிவைக்க வேண்டுமென்று பர்மாவிலுள்ள தனவணிக வாலிபர்களை இச்சங்கத்தார் கேட்டுக் கொள்கிறார்களென்பதாக ஓர் தீர்மானம் கொண்டுவரப்பட்டது. அதன்பின் திரு. மு. சோமசுந்தரச் செட்டியாரவர்கள் வாலிபர் மகாநாடு கூட்டவேண்டியது முக்கியமென்றும் பெண்களை இப்பகுதிகளுக்கு உடன் அழைத்து வருவதற்கு அம் மகாநாட்டில் ஓர் தீர்மானம் கொண்டுவர வேண்டுமென்றும் பல உதாரணங்களுடன் மிக அழகாக எடுத்துக்காட்டி மேற்படி விடயத்தை ஆமோதித்தார்கள். பிறகு திருவாளர்களான வீர. அழ. அழகப்பச் செட்டியாரவர்களும் சுப. கருப்பய்யா செட்டியாரவர்களும், சுப. இராமசாமிச் செட்டியாரவர்களும், மு. லெட்சுமணன் செட்டியாரவர்களும், பழ. ப. நாராயணனும் திரு மிகு. உபாத்தியாயர் அய்யாவையாவர்களும், பத்மநாபராசு அவர்களும், பிரஸ்தாப மகாநாடு கூட்டிவைக்க வேண்டியது அவசியமென்று ஆதரிக்க தீர்மானம் ஏகமனதாய் இனிது நிறைவெய்தியது.

அதன்பின்னர் தலைவரவர்கள் முடிவுரையில் இம் மகாநாடு கூட்டுவதால் எவ்வளவோ நன்மைகள் ஏற்படுமென்றும், இம் மகாநாட்டை முதலில் கூட்டி ஓர் கிளர்ச்சி உண்டாக்கி விடுவோமேயானால் இதிலிருந்து மக்களுக்கு ஓர் உணர்ச்சி உண்டாகிவிடுமென்றும் அநேக உதாரணங்கள் எடுத்துக்காட்டிச் சபையை இனிது பரவசப்படுத்தினார்கள். முடிவில் மு. இலக்குமணச் செட்டியாரவர்களால் அனைவருக்கும் வந்தனங் கூறப்பெற்று அவை மாலை ௬ மணிக்கு இனிது நிறைவெய்தியது எனக் காரியதரிசி திருவாளர் பழ. ப. நாராயணன் எழுதுகிறார்.



# விருதுநகர்.

(நமது விசேஷ நிருபரிடமிருந்து.)

ஆண்டு விழா:—விருதுநகர் ராவ்பகதூர் இரத்தினசாமி நாடார் புத்தக வாசகசாலையின் ஒன்பதாவது ஆண்டுவிழா ௬-௧௨-௨௬ அன்று ஷெ வாசகசாலையின் முன்பு, புஷ்பங்களாலும், தோரணங்களாலும், தேசியக் கொடிகளாலும், படங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்த சிங்காரக் கொட்டகையில் இனிது நடைபெற்றது.

**தலைவர் வரவேற்பு.**

இவ் வைபவத்திற்கு அவைத் தலைமை வகிக்க அன்புடன் இசைந்த காரைக்குடி "குமரன்" பத்திராசிரியரான திரு. சொ. முருகப்பச்செட்டியாரை விருதை ரெயில்வே ஸ்டேஷனில், ஷெ வாசகசாலையின் காரியதரிசியான திரு. பிரகாசம் நாடார், வாசகசாலையின் நிர்வாக அங்கத்தினர்களான, திரு. சங்கரபாண்டியநாடார், திரு. ரெங்கசாமி நாடார் முதலியோர் மாலையிட்டு வரவேற்றனர்.

**பொதுக்கூட்டம்.**

மாலை ௫-௩0 மணிக்கு மேற்சொல்லிய பந்தலில் ஒரு பெருத்த பொதுக்கூட்டம் கூடியது. அக்கூட்டத்திற்கு நகரிலுள்ள பல பிரமுகர்களும் நூற்றுக்கணக்கான இளைஞர்களும் விஜயம் செய்திருந்தனர்.

**அறிக்கைப்பத்திரம்.**

முதலில் கடவுள் வாழ்த்துப் பாடப்பெற்றபின், வாசகசாலையின் காரியதரிசியான திரு. பிரகாசம் நாடார் சென்ற வருட அறிக்கைப் பத்திரத்தைப் படித்தார். அதில், அறிக்கையில் கண்ட வருஷத்தில் வாசகசாலையின் வேலை மிகவும் விருத்தியடைந்து வந்திருக்கிறதென்றும், வாசகசாலையினரால், காந்தியடிகளின் ஜென்மதினக் கொண்டாட்டம் கொண்டாடப்பெற்றதென்றும், மற்ற சாதாரண கூட்டங்களும் முறையே நடைபெற்றனவென்றும், சென்ற வருஷ ஆரம்பத்தில் இருப்பும், வருஷத்தினிடையே வந்த வருமானமும் சேர்ந்து ரூ. ௭௫௩-௧௫-௮ என்றும், நடைமுதல்வருஷத்தில் ஏற்பட்ட செலவு ரூ. ௬௨௪-௨-௩ என்றும், வாசகசாலையினரால் காங்கிரஸ் கிளை கதர் வஸ்திராலயமாக ஒன்று "மஹாத்மா காந்தி கதர் வஸ்திராலயம்" என்ற பெயருடன், இந்நகரில் ஸ்தாபிக்கப்பட்டு செவ்வனே நடைபெற்று வருகின்றதெனவும் சொல்லப்பட்டிருந்தது.

**அக்கிராசனரின் முன்னுரைப் பிரசங்கம்.**

அவைத் தலைவராக வீற்றிருந்த திரு. செட்டியாரவர்கள் பின் பெருத்த கரகோஷத்தினிடையே எழுந்து தமது அக்கிராசனச் சொற்பொழிவை நிகழ்த்தினார்கள். அதன் சாராம்சம் பின் வருமாறு:—

**நாடார் சமூகமும்—நகரத்தார் சமூகமும்.**

"சகோதரர்களே! காலஞ்சென்ற ராவ் பகதூர் இரத்தினசாமி நாடாரவர்களது ஞாபகச் சின்னங்களில் ஒன்றாக இவ்வாசகசாலை விளங்குவது மிகவும் பொருத்தமானதே. அப் பெரியார், தமது சமூகத்தின் முன்னேற்றத்திற்காகவும், கல்வி வளர்ச்சிக்காகவும், சமூக ஒற்றுமைக்காகவும் மிகவும் பாடுபட்டிருக்கிறாரென்பது தமிழுலகம் அறிந்ததே. அன்னாரின் ஞாபகச் சின்னங்கள் பல தமிழ் நாட்டில் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன வென்பதும் நாம் அறியாததல்ல.

எங்கள் சமூகமான நகரத்தார் சமூகத்திற்கும், நாடார் சமூகத்திற்கும் பல விஷயங்களில் ஒற்றுமையுண்டு. தற்பொழுது உலகிலிருக்கும் எந்ததேசத்தை நோக்கினும், அந்ததேசத்தின் பொது நிலை வியாபாரிகளின் கையில் தானிருக்கின்றதென்பதை யாரும் மறுக்க முடியாது. பல தேசங்களுக்குள் போட்டியும், பூசலும், சண்டையும் ஏற்படுவது வியாபாரத்தின் மூலமாகத்தான் என்பதும் நாம் அறியாததல்ல. நம்முடைய தேசமும் வியாபாரிகளாலேயே தான் ஆளப்பட்டு வருகிறதென்பது யாவரும் அறிந்ததே. ஜெர்மனி, முதலிய பல வெளிதேசங்கள் முன்னேற்ற மடைந்திருப்பதும் வியாபார மூலமேதான். ஆனால் மற்ற தேசங்களைக் காட்டிலும், நம் தேசத்திற்கு வியாபார வசதிகள் மிகவும் குறைவு. நம் நாட்டின் புராதன நூல்களில் நம் தேசத்தின் வியாபார முன்னேற்றத்தின் பொருட்டு பல கப்பல்களிருந்தன வென்று சொல்லப்பட்டிருக்கின்றன. அக் கப்பல்கள் இது போழ்து எங்கு சென்றுவிட்டன? நம் தேசத்தின் வியாபார முன்னேற்றத்திற்கேற்ற சாதனங்கள் தற்பொழுது மிகமிகக் குறைவாயிருக்கின்றதெனினும், நம் தமிழ் நாட்டில் நாடார்களும், நகரத்தார்களுமே வெளிநாட்டு வியாபார விஷயத்தில் ஈடுபட்டிருக்கின்றனரென்பதை எவரும் மறுக்கமுடியாது. வெளி நாட்டிலிருந்து வியாபார மூலம் பொருளைத் தாய்நாடு கொண்டு வருவதில் இவ்விரு சமூகத்தாரும் ஒன்றுபட்டே யிருக்கின்றனர். 'மகமை' என்று சொல்லப்படும் தர்மநிதி இவ்விரண்டு சமூகத்தாரிடமுமே விசேஷமாயிருந்துவருகிறது.

**வேலையில்லாத் திண்டாட்டமும் நாட்டின் நிலைமையும்.**

தற்பொழுது நம்நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம் மிகுந்த வறுமையை உண்டாக்கிவிட்டது. ஆனால் இதற்குப் பள்ளிக்கூடப்படிப்பு என்பது மாத்திரம் முக்கிய காரணமல்ல, பள்ளிகளிலிருந்து கல்வி பயின்று வெளிவரும் மாணவர்கள் குமாஸ்தாக்களாக வெளிவருகின்றார்களே யொழிய வியாபார நோக்கத்துடனும், சுதந்திர தாகத்துடனும் வருபவர் மிகச்சிலரே. அதுமாத்திரம்வேலையில்லாத்திண்டாட்டத்திற்கு முக்கியகாரணமல்ல. மேல்நாட்டு நாகரிகம் நமக்குக்கற்பித்த ஆடம்பர வாழ்வே. இதற்கு முக்கியகாரணம். இவ்வாடம்பர வாழ்வினால் தேசம் மிகக் கேவலமான அடிமை நிலைக்கு வந்துவிட்டதென்று மகாத்மாகாந்தியடிகள் தமது இயக்கத்தை ஆரம்பித்தார்கள். இவ்வாடம்பரமற்ற வாழ்வைத் தொலைப்பதற்கு நம் மாணவர்களுக்கு தேசிய உணர்ச்சியைப் புகட்டக்கூடிய நூல்களைப்படிக்கும்படி செய்தல்வேண்டும். இவைகளுக்கு அடிப்படையாயுள்ளவை வாசகசாலைகளேயாம். ஆகையால் வாசகசாலைகளை விருத்தி செய்யவேண்டுவது நமதுகடமையேயாம். தற்பொழுது நம்முள் ஏற்பட்டிருக்கும் சண்டைசச்சரவுகளுக்கு, அனேவரும் உத்தியோக வேட்கைகொண்டு அலைவதே முக்கிய காரணம். இவ்வித உத்தியோக வேட்கை நாடார் சமூகத்தினரிடமும், நகரத்தார் சமூகத்தினரிடமும் இல்லாதிருப்பது குறிப்பிடத்தக்கதே. இவ்விரண்டு சமூகத்தாரும் வியாபாரிகளாயிருப்பதால்தான் உத்தியோக வேட்கையில்லாது சுதந்திர வாழ்வு வாழவேண்டுமென்ற நோக்கத்துடனிருக்கின்றனர்.

**நாட்டின் தற்காலக் கல்வியும்—தமிழ் மொழியும்.**

நமது நாட்டிலுள்ள கலாசாலைகளிலும் பள்ளிகளிலும் கற்பிக்கப்படும் கல்விக்கும் பிறநாடுகளில் கற்பிக்கப்படும் கல்விக்கும் அநேக பேதங்கள் உள. நம்கலாசாலைகளில் மாணவர்கள் கல்விபயின்று வெளிவருங்கால் தங்கள் தாய்மொழியை முற்றுமே மறந்தவர்களாக விருக்கின்றனர். ஆங்கிலக் கல்வி மிகுதியாகப் பயின்றவர்கள் தமிழ் நூல்களின் பெருமையை அறிந்துகொள்ள முடியாமல் தவிக்கின்றதை நாம் அனுதினமும் பார்க்கிறோம். ஆகையால் தாய்மொழியை வளர்ப்பதற்கு வேண்டிய முயற்சிகளை நாம் எடுத்துக்கொள்ளவேண்டும். தமிழ் நாட்டிலே பிறந்த தமிழ் மொழியிலே வளர்ந்த, தமிழ் சமூதாயத்திலே பழகிவரும் நாம், தமிழ் மொழி சீர்கேடானநிலைமையிலிருப்பதைச்சீர்திருத்த முன்வர வேண்டுவது மிகவும் அவசியமாகும். இந்நகரில் ஒரு கழகம் ஏற்படுத்துவதற்கு வேண்டிய முயற்சிகளை எடுத்துக்கொண்டால் அது மிகுதியும் பயன் தரக்கூடியதென்று நான் உங்களை அவ்வாறுசெய்யும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். தமிழன் என்ற உணர்ச்சி நமக்கு ஏற்படின் அதன் மூலமாயே நம்முள் உள்ள ஜாதிச் சண்டைகள் முதலிய பல பிரச்னைகள் தாமாகத் தீர்ந்துவிடும். நம் நாட்டெங்கும் தமிழ் மொழி வளரும் வண்ணம் தமிழ் முழக்கம் செய்ய முன் வரும்படி உங்களை மிகவும்வேண்டிக்கொள்கிறேன். வியாபார சமூகத்தாராகிய, நாம் மிகுந்த ஒற்றுமையுடன் உழைத்து அதிகமான அரசியல் சுதந்திரங்களைப் பெறல் வேண்டும்.

**கதரின் அவசியம்.**

இவ்வாசகசாலை அங்கத்தினர்களின் முயற்சியால் ஒரு கதர் வஸ்திராலயம் ஏற்படுத்தப்பட்டு. கதர் அபிவிருத்தியின் பொருட்டு மிகவும் தீவிரமான வேலைகள் நடைபெற்று வருகின்றதைக் கேட்டு நான் மிகவும் களிப்படைகிறேன். மகாத்மா காந்தியடிகளின் சீர்மாண வேலைத் திட்டத்தின் முக்கிய அம்சமாகிய கதரை அபிவிருத்தி செய்வதில் நாம் மிகுந்த தீவிர முயற்சியெடுத்துக்கொள்ள வேண்டும். கடைசியாக என்னை இங்கு வரவேற்று எனக்குச் செய்த கௌரவத்திற்காக என் மனமுவந்த வந்தனத்தை உங்களுக்குச்செலுத்துகிறேன்" (நீண்டகரகோஷம்)

இதன் பின், பெல்காமில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் மஹாசபையில் நூல் நூற்பதில் தேர்ச்சிபெற்று தங்கப்பதக்கம் பரிசுபெற்றவரும், திருப்புவனம் வாசியுமான ஸ்ரீமான் மீனாக்ஷிசுந்தரம்பிள்ளையவர்கள் சபையில் ராட்டினத்தில் வெகு மெல்லிய இழையை நூற்றுக் காண்பித்தார்கள்.

மதுரை வக்கீல் ஸ்ரீமான் பொன்னையா நாடார் அவர்கள் "நாடார்களும் தேசசேவையும்" என்பதைப்பற்றியும், திரு. கருப்பையாபிள்ளை யவர்கள், வாசகசாலையின் பயன்களைப்பற்றியும் திருக்குறள் அவதானியாராகிய திரு. சுப்பிரமணிய தாஸ் அவர்கள் "திருக்குறள்" என்பதைப்பற்றியும், ஸ்ரீமான் என். எஸ். கிருஷ்ணய்யர் "காந்தி போதிப்பதென்ன" வென்பதைப்பற்றியும் இனிய சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள்.

பின்பு இந்நகர் உயர்தர பாடசாலை மாணவர்கள் "பொன்விலங்குகள்" என்ற நாடகத்தில் சில காக்ஷிகளை இனிது நடத்திக் காண்பித்தார்கள்.

அக்கிராசனர் தம் முடிவுரைப் பிரசங்கத்தில், கதரின் பெருமையைப்பற்றியும், அதை அனைவரும் உடுத்தவேண்டிய தன் அவசியத்தைப்பற்றியும், ஜாதிச்சண்டை சமூகச்சண்டை முதலியவைகளை யொழித்து, ஒற்றுமையுடன் தேசிய விஷயத்தில்ஈடுபடவேண்டுமென்பது பற்றியும் நாம் அன்னியநாட்டு சாமான்களை அறவே பகிஷ்கரிக்க வேண்டுமென்பது பற்றியும், நமது மக்களை தேசிய உணர்ச்சியுடன் வளரும்படி செய்தல் வேண்டுமென்பது பற்றியும், நம்மக்களுக்கு தேசியக்கல்வி கற்பிக்கப்பட வேண்டுமென்றும், அவர்கள் ஆடம்பரமற்ற வாழ்வுவாழும்படி செய்தல்வேண்டுமென்றும் பேசிவிட்டு நிகழ்த்தப்பட்ட சொற்பொழிவுகளைப்பற்றிச்சிற்சில குறிப்புகள் சொல்லி முடித்தார்கள்.

கடைசியாக அவைத் தலைவரவர்களுக்கும், ஏனையோர்க்கும் வந்தனோபசாரங்கள் சொல்லப்பட்டு கூட்டம் இரவு ௧0-௩0 மணிக்கு இனிது கலைந்தது.

# மதிப்புரை.

## தொழிலாசிரியன்.

இது 'தொழில் முறைகளைக் கற்பிக்கும்' மாதாந்த சஞ்சிகை. ஆசிரியர் திரு. கே. எஸ். வைத்தியநாதன் அவர்கள். கைத்தொழில் பகுதி, வைத்தியப் பகுதி, விவசாயப் பகுதி முதலிய பகுதிகளோடு வெளிவருவது. வருட சந்தா ரூபா ௨. வெளிநாடுகளுக்கு ரூபா ௩. "மானேஜர்-'தொழிலாசிரியன்' ஆபீசு சிவகெங்கை" என்ற விலாசத்திற்கு வேண்டுவோர் எழுதிக்கொள்ளலாம்.

## திருச்சி நேசன்.

திருச்சியிலிருந்து திங்கள் இருமுறை வெளியிடப்பெறுவது. ஆசிரியர் திரு. பார்த்தசாரதி அவர்கள். இது தேசிய உணர்வோடு காங்கிரஸ் கொள்கைகளைத் தழுவி நடைபெறுகின்றது. 'திருச்சி நேசன்' உண்மையான தமிழ் நேசனாயிருப்பது பாராட்டத்தக்கது. திருச்சி ஜில்லா வாசிகள் இப் பத்திரிகைக்கு விசேஷ ஆதரவு அளிக்கப் பின்வாங்கார் என்று நம்புகிறோம். வருஷ சந்தா ரூபா ௩. விலாசம்:—பத்திராதிபர், ஆண்டார் தெரு, திருச்சிராப்பள்ளி.

## "வன்னியும் கிணறும் இலிங்கமும் அழைத்த சரித்திரம்."

திருவிளையாடற் புராணத்திலிருந்து எடுக்கப்பெற்ற இச்சரித்திரம், இரங்கோன் தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கத்தாரின் மூன்றாவது ஆண்டு நிறைவு விழாவை முன்னிட்டு, நாடக வாயிலாக நடிக்கப் பெற்றது. இதற்கு, முற்கால இராகதாளங்களாலும் தற்கால நூதன முறைகளாலும் அமைத்த சரித-நாடகத்திற்கு ஏற்புடைய கீதங்களை, இயற்றியவர் திரு பெரி. இலக்குமணன் செட்டியார். திருவிளையாடற் புராணச் செய்யுட்களில் கூறப் பெறாத—கதை நிகழ்ச்சிக்குரிய சில இடங்களின் பெயர்கள் காலத்திற்கேற்ப அமைக்கப் பெற்றுள்ளன. இப் புத்தகங்களில் நல்ல காகிதத்தில், ஆசிரியரது உருவப்படத்துடன் இரங்கோன் தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கத்தினரால் வெளியிடப் பெற்றுள்ளது. விலை அணா எட்டு. வேண்டுவோர் குறித்த சங்கத்திற்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

## உதயபாரதி.

'பால பாரதி' யென்ற பெயர் பூண்டு ஓர் உயர்தர மாதாந்தப் பத்திரிகை காலஞ்சென்ற ஆசிரியர் வ. வெ. சு. ஐயர் தலைமையில் நடைபெற்றது. ஆசிரியர் காலஞ்சென்றபின், அப் பத்திரிகையும் வளர்ச்சி குன்றி அழிந்துபோயிற்று. இப்போது அப் பத்திரிகையின் பெயரையும் தம் தேசபக்த கவியான பாரதியின் பெயரையும் ஒருங்கே நினைப்பூட்டும் 'உதயபாரதி' திருநெல்வேலியினின்று தோன்றுவது. இதற்கு ஆசிரியராக அமைந்த திருவாளர் ப. ராமஸ்வாமி ஐயங்கார் தேசிய நோக்குடையராக உணர்வும் செந்தமிழ்த் தெய்வத்தின் பால் பெருந்தாகமுமுடைய இளைஞருள் ஒருவர். பத்திரிகையின் பெயரும் அமைப்பும் உள்ளடக்கமான பொருளும் ஆடம்பரமற்ற அழகு சுமந்து மிளிர்கின்றன. தாய் மொழியும் தாயகமும் தழைக்க இப் பத்திரிகை நற்றொண்டு புரியுமென நம்புகிறோம். வருட சந்தா ரூபா ௨. வெளிநாட்டிற்கு ரூபா ௨. விலாசம்:—பத்திராதிபர், 'உதயபாரதி' காரியாலயம், திருநெல்வேலி.

## விளம்பரம்.

என்னுடைய ஸ்வீகார குமாரன் கண்ணப்பசெட்டியார் மைனர். ஷ்டியானை சில துஷ்ட சினேகிதர்கள் வசப்படுத்திக்கொண்டு குடும்பத்தில் ஒத்துமையில்லாமலும் கெட்டமார்க்கத்தில் நடத்திவருகிருர்கள். பிரதிப்பிரயோஜனமில்லாமலும் யாதொரு நியாயமான காரணமில்லாமலும் அற்ப பிரதிப் பிரயோஜனங்கொடுத்து மிகுந்த தொகைகளுக்கும் இவ்விதம் பலவாருக ஷ்டியானிடம் அனேகர் நோட்டுகள் தஸ்தவேசுகள் ஏமாத்தி வாங்குகிறதாகவும் தெரிகிறது. ஷ்டியானுக்கு சுமார் 3 மாதம் வயதுள்ள அண்ணுமலையென்ற ஆண் குழந்தையும் இருக்கிறது. ஷ்டி கண்ணப்பசெட்டியாரிடம் ஆதாரவுகள் யெழுதி வாங்கவாவது அவனுக்கு கடன் கொடுக்கவாவது யாதொரு நியாயமான முகாந்திரமுமில்லை யென்றும் அவசியமில்லையென்றும் அவனிடம் வாங்கும் நோட்டுகள் தஸ்தாவேசுகள் சட்டப்படி செல்லாவணி ஆகாதென்றும் இதன்மூலம் எல்லோருக்கும் அறிவிக்கலாயிற்று.

சுப. அ. சுப. சுப்பிரமணியன்செட்டியார்

மதுரை 29-11-26 } நாட்டரசங்கோட்டை.










குமரன் சந்தா விபரம்.

| | |
|---|---|
| வருடச் சந்தா | ... ௩—0—0 |
| வெளிநாடு வருடச்சந்தா | ௬—0—0 |
| தனிப்பிரதி | ... 0—உ—0 |

குமரனுக்குசந்தாசேர்க்கவும் விளம்பரம் வாங்கவும் ஏஜண்டுகள் தேவை. தக்க கமிஷன் தரப்படும். விபரத்திற்கு எழுதவும்.

மானேஜர் குமரன் ஆபீஸ், காரைக்குடி.




### சைவ வைஷ்ணவ சம்வாதம்.

சொ. முருகப்பசெட்டியாரால் (பத்திராதிபர்) காரைக்குடி 'குமரன்' அச்சுக்கூடத்தில்அச்சியற்றிப் பிரசுரிக்கப்பெற்றது.

